# நானே நானா? யாரோ தானா?

மைக்ரோ மிடி, ஸ்லீவ்லெஸ் டாப்ஸ், ப்ளீச் செய்யப்பட்ட செம்பு நிற தலைமுடி என்று அல்ட்ரா மாடர்ன் பெண்ணாகவே ஜோதிகாவைப் பார்த்துப் பழகி விட்ட ரசிகர்களுக்கு, 'டும்... டும்... டும்' படத்தில் அவரைப் பார்க்க ஆனந்த அதிர்ச்சியாக இருக்கும்.

அழகம்பெருமாள் இயக்கும் இந்தப் படத்தில் 'கங்கா' என்ற கிராமத்துப் பெண்ணாக, நடித்திருக்கிறார்.

"படிச்சவக... சட்டம் பாஸ் பண்ணியிக்கிறதா சொன்னாக... பொய் சொன்னியளா? இல்ல, இதைத்தான் காலேஜ்ல கத்துக் குடுத்தாகளா?" என்று நீட்டி முழக்கி திருநெல்வேலி பாஷை பேசியிருக்கேன். மாதவனுக்கும் எனக்கும் டோட்டலா காஸ்ட்யூம் மாத்தியிருக்காங்க... ஜிமிக்கி, பாவாடை தாவணி எல்லாம் எனக்கு பொருத்தமா இருக்குமான்னு கொஞ்சம் டென்ஷனா இருந்தது. ஆனால் அதுதான் எனக்கு நல்லா இருக்கிறதா ஒட்டுமொத்த யூனிட்டும் வோட்டுப் போட்டுடுச்சு" என்றார் ஜோதிகா.

படத்தின் இன்னொரு விசேஷம்: வி.கே. ராமசாமியிலிருந்து விவேக், வையாபுரி வரை பத்தொன்பது காமெடி நடிகர்கள் கலகலப்பூட்டியிருக்கிறார்கள். ○

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

ச

ச்சின் டெண்டுல்கர், எந்தப் பந்துவீச்சாளரும் கண்டு மிரளும் ஒரே பேட்ஸ்மேன். கடந்த மூன்று வருடங்களில் ஆஸ்திரேலிய அணிக்கு எதிராக தாம் ஆடிய இருபத்து நான்கு போட்டிகளில், நாலாயிரத்து இருநூறு ரன்களைப் பெற்றிருக்கிறார் இவர். இதில் பன்னிரண்டு சதங்களும் பத்து அரை சதங்களும் அடங்கும். இப்போது மும்பையில் நடந்த டெஸ்ட் போட்டியிலும் அவர் மட்டுமே நிலைத்து நின்று ஆடியிருக்கிறார். மும்பை வாங்கடே ஸ்டேடியத்தில் கல்கி வாசகர்களுக்காக அவரைச் சந்தித்தோம்.



# "நான் மட்டுமே இந்திய அணி இல்லை!"



ஆஸி. அணி 98-ம் ஆண்டு இந்தியா வந்தபோது வார்னே பந்து வீச்சை எதிர்கொள்ள வேண்டுமென்பதற்காக ஸ்பின்னர் எல்.சிவராமகிருஷ்ணனைப் பந்துவீசச் செய்து பயிற்சி எடுத்தீர்கள். பாக். அணியின் அக்ரம் பந்து வீச்சைப் பதம் பார்க்க வேண்டுமென்பதற்காகச் சிறப்பு கவனம் செலுத்தியிருந்தீர்கள். இப்போது அதுமாதிரி ஏதாவது சிறப்பு பயிற்சி...?

ஆமாம். இல்லாம என்ன. நம்ம வேகப் பந்து வீச்சாளர்களை இருபது அடி தூரத்தில் (பொதுவாக ஸ்டம்புகளுக்கிடையேயான ஆடுகளம் இருபத்தி இரண்டு அடி தூரம்.) பந்து வீசச் செய்து பயிற்சி எடுத்தேன். அப்பதான் மெக்ராத், ப்ளமிங், காஸ்ப ரோவிச் போன்றவர்களுடைய பௌன்சர் களைச் சமாளிக்க முடியும். முடிந்தது.

ஆஸி. அணி தங்களின் வெற்றிக்கு நீங்கள் மட்டும்தான் தடையாக இருப்பதாக நினைக்கிறது. 'அடுத்த போட்டியில் சச்சினை விரைவில் அவுட் டாக்குவோம்' என்றிருக்கிறார் ரிக்கி பாண்டிங்?

நான் மட்டுமே இந்திய அணி இல்லை. நான் ரன் எடுக்கிறேன் என்றால் எதிர்ப்புறத் தில் என் பார்ட்னரும் ஆடணும். தனியா ஆடறதுக்கு இது டென்னிஸ் மேட்ச் இல்லை. என் விக்கெட்டை எடுத்தாலே வெற்றிதான் என்பதெல்லாம் கொஞ்சம் அதிகப்படியான பாராட்டுதான். தவிர ஆட் டம் வெறும் பேட்ஸ் மேன்களைப் பொருத்து நிர்ணயிக்கப்படுவதில்லை. பந்துவீச்சாளர் களைப் பொருத்துதான் அமைகிறது. ஒரு நாள் போட்டியில் வேண்டுமானால் வெற்றி பேட்ஸ்மேன்களால் நிச்சயிக்கப்படுவதாகச் சொல்லலாம். டெஸ்டுகளில் முடியாது.

முதல் டெஸ்டில் இந்தியாவின் தோல் விக்கு என்ன காரணமென நினைக் கிறீர்கள்?

கடந்த முறை ஆஸி. அணி இந்தியா வந்தபோது துவக்க ஆட்டக்காரான சித்து அதிரடி ஆட்டம் ஆடி நல்ல அடித்தளத்தை ஏற்படுத்த, ராகுல், அசார், நான் எல்லோ ருமே சதமடிக்க முடிந்தது. இந்த முறை துவக்கம் அப்படியல்ல. கடந்த இரண்டு வருடமாகவே சரியான துவக்க ஆட்டக் காரர்கள் இந்திய அணிக்கு அமையவில்லை. அதற்காக இப்போது ஆடும் ரமேஷையும் தாஸையும் குறை கூறவில்லை. இப்போது தான் இருவரும் ஆட வந்திருக்கிறார்கள். 'செட்'ஆக நாளாகும். அப்போது கும்ப்ளே + ராஜுவின் ஸ்பின் கூட்டணி விக் கெட்டுகளை எடுக்க உதவியது. இப்போது இருவரும் இல்லை. அதுமட்டுமில்லாமல் ஆஸி. அணி இப்போது நல்ல அனுபவமிக்க அணியாக இருக்கிறது. எல்லோரும் ஃபார்மில் இருக்கிறார்கள்.

உங்களுக்கும் கங்குலிக்கும் இடையே...

யெஸ். நல்ல நண்பர்கள். கிரிக்கெட்டை இருவருமே நேசிக்கிறோம். இருவரும் இணைந்து பல சாதனைகள் செய்திருக் கிறோம். கங்குலி இப்ப கேப்டன். நான் கேப்டனாக இருந்தபோது பேட்டிங்கில் சரியாக கவனம் செலுத்த முடியவில்லை. இப்போது முடிகிறது. ஜாலியாக ஆடுகிறேன். கங்குலியால் கேப்டன் பதவியில் இருந்து கொண்டும் நன்றாக ரன் குவிக்க முடிகிறது. அது பெரிய வரப்பிரசாதம்தான்.

பேட்டி, படம் : - **உமா மணி**

"நான் படிக்கிறதுக்கு ரொம்ப கஷ்டப் பட்டேன். என்னுடைய வகுப்பு





ஆசிரியர் காளிதாஸ் சார், தன்னுடைய சைக்கிளை ஐந்நூறு ரூபாய்க்கு விற்று கல்லூரியில் அப்ளிகேஷன் போட உதவி செய்தார். அன்றைக்கு முடிவு செய்தேன், நமக்கு ஏற்பட்ட கஷ்டம் யாருக்கும் ஏற்படக் கூடாதுன்னு. ஏழை மாணவர்களோட படிப்புக்கு என்னால் முடிஞ்ச உதவிகளைச் செய்யணும்னுதான் கல்லூரி மாணவர்களைச் சேர்த்து கலை நிகழ்ச்சிகள் நடத்தி அதில் வரும் வருமானத்தை ஏழை மாணவர்களுக்குக் கல்விக்காக கொடுத்து உதவினேன். நிறைய மாணவ மாணவிகள் ஆர்வமாய்ச் சேர்ந்ததால் தமிழ்நாடு கல்ச்சுரல் அகதமினு ஆரம்பிச்சு இரண்டு வருடமாகிறது" என்கிறார் விஜயபாரதி.

**வி**ஜயபாரதி, மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. இதழியல் படிக்கும் 21 வயது மாணவி... திருப்பரங்குன்றம் நோக்கிச் செல்லும் சாலையில் பழங்காநத்தம் பேருந்து நிலையத்திற்கு எதிரேயுள்ள 'தமிழ்நாடு கல்ச்சுரல் அகதமி'யின் நிறுவனர்... செயலர்...

பழங்காநத்தத்தில் பெட்டிக்கடை வைத்திருக்கும் அப்பா, அம்மா, அண்ணன் இரண்டு தங்கைகள் உள்ள குடும்பத்தின் பெண் பிள்ளைகளில் மூத்தவர். இவர் கலையுணர்வு உள்ள கல்லூரி மாணவர்களைச் சமுதாய நலனுக்காகவும் மனித நேயச் செயலுக்காகவும் பயன்படுத்திக் கொள்ளும் புதிய உத்தியை வகுத்துக் கொண்டு வலம் வருகிறார்.

ஆரம்பத்தில் ஏழை மாணவர்களுக்கு உதவி செய்து வந்த அகாதமி, தற்பொழுது ஏழை பெண்களுக்குத் தையல் மிஷின்கள், திருமண உதவிகள், மருத்துவ உதவிகள், சட்ட உதவிகள் என்று நிறைய விரிவாக்கம் செய்துள்ளது.

"நாங்கள் செய்த உதவியை மேடை போட்டு விளம்பரப்படுத்துவதில்லை. எங்கள் அமைப்பைப் பற்றி தெரிஞ்ச மாணவர்கள் உதவி கேட்டுக் கடிதம் எழுதினால் எங்க அமைப்பின் உறுப்பினர் மூலம் அந்தக் கல்லூரிக்குச் சென்று உண்மையிலேயே உதவி தேவைப்படும் மாண



வர்தானா என்று தெரிந்து கொண்டு உதவி செய்கிறோம்" என்கிறார் விஜயபாரதி.

இந்தப் பணியை கடந்த நான்கு ஆண்டுகளாகச் செய்து வரும் விஜய பாரதி, உதவி செய்யும் தொகைகளுக்குக் கணக்கு வைத்துக் கொள்வதில்லையாம். உதவி பெறுபவர்களின் முகவரி மட்டும் குறித்து வைத்துக் கொள்கிறாராம்.

## "பெயருக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டு இதைச் செய்யலை..."

"எங்க அமைப்பிலே பணம் உதவி பெற்றவங்க' நல்ல நிலைக்கு வந்த உடனே திருப்பிக் கேட்கணும்ங்கிற எண்ணமோ திருப்பித் தருவார்களா என்ற எதிர்பார்ப்போ இல்லை... நாங்க செய்யற மாதிரி அவங்களும் ஒரு நாலு . பேருக்கு உதவி செய்யற நல்ல எண்ணத்தை வளர்க்கிறதுதான் எங்க அமைப்பின் நோக்கம். பெரும்பாலும் எங்களிடம் உதவி பெறுகிறவங்க எங்க அமைப்பிலே உறுப்பினர் ஆகிவிடுவாங்க."




**வி**ஜய பாரதியின் சமூக சேவைகளுக்கான விஜயம் அரசியல்வாதிகளின் காதுகளுக்கு எட்டியிருக்கிறது. மாவட்ட அளவிலான பொறுப்புகள் தருவதாகக் கூட சில அரசியல் கட்சிகள் விஜய பாரதியை அணுகியிருக்கிறார்கள். அவற்றையெல்லாம் மறுத்து விட்டாராம் விஜய பாரதி.



"பெயருக்கும், புகழுக்கும் ஆசைப்பட்டு இதைச் செய்யலை சார்... இந்த நாட்டில் நானும் ஒரு பிரஜை... எங்களுடைய சேவையைப் பார்த்து அரசு அணுகி திட்டங்களைக் கொடுத்து செய்யச் சொன்னால் செய்வோம். நாங்களாக போகும் எண்ணம் இல்லை" என்றார்.

"இந்த அமைப்புகளுக்கு வழக்கறிஞர்களும், மருத்துவர்களும், செல்வந்தர்களும் கூட ஆதரவு தர்றாங்க சார்... பெரிய தொகைக்கான உதவியாக இருந்தால் எங்க அமைப்பிலே பணம் இல்லைனா எங்க லெட்டர் பேடுல சிபாரிசு கடிதம் கொடுத்தா உதவி செய்யறாங்க... டாக்டருங்க சில பேர், எங்க அமைப்பின் மூலம் உதவி கேட்கின்ற நோயாளிகளுக்




• கலைநிகழ்ச்சி

குக் குறைந்த செலவிலே மருத்துவ உதவி செய்யறாங்க... அதே மாதிரிதான் சட்ட உதவியும் தர்றாங்க" என்கிறார் நன்றியுடன்.

இன்று 200க்கும் மேற்பட்ட கல்லூரி மாணவர்கள் இந்த அமைப்பில் உறுப்பினர்களாக உள்ளனர். மதுரையில் உள்ள லயன்ஸ், ரோட்டரி சங்கங்கள், எய்ட்ஸ் விழிப்புணர்வு, போலியோ தினங்களில் கலை நிகழ்ச்சிகள் நடத்தச் செய்து இந்த அகாடமிக்குப் பொருளாதார உதவிகள் செய்கிறார்கள்.

"ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு நகரத்தில் நிகழ்ச்சிகள் நடத்துகிறோம். அந்தப் பகுதியில் இருக்கிற மாணவர்கள் உறுப்பினர்களாகச் சேர்வதற்குச் சந்தர்ப்பமாக இது அமைகிறது. உதவி கேட்பவர்கள் அந்தப் பகுதிகளைச் சார்ந்தவர்களாக இருந்தால் அவர்களைப் பற்றி நேரில் சென்று விசாரித்துக் கூற இந்த உறுப்பினர்களைப் பயன்படுத்திக் கொள்கிறோம். ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் திரட்டப்படும் நிதியிலிருந்து, நிர்வாகச் செலவுகள் போக மீதி தொகையை அப்படியே வங்கியில் போட்டு விடுவோம். உதவி தேவைப்படுவோருக்கு 'செக்' மூலம் நிதி அனுப்புகிறோம்" என்கிறார் விஜயபாரதி.

எதிர்காலத் திட்டம் குறித்து விஜயபாரதியிடம் கேட்டபோது...

"உதவும் கரங்கள் போன்றதோர் அமைப்பை மதுரையில் ஏற்படுத்தப் போகிறேன். யாருக்கு எந்த உதவி தேவைப்பட்டாலும் அதைச் செய்து கொடுக்கிற மாதிரி ஒரு வலுவான அமைப்பாக அது இருக்கும். அதுதான் என் நோக்கம். இந்தச் சமூகப் பணிதான் என்னுடைய வாழ்க்கை" என்று கூறும் விஜயபாரதி திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை என்ற முடிவோடு இருக்கிறார்.




• விழா மேடையில்...

பத்திரிகைகளுக்கு, கதை, கவிதை எழுதுவதிலும் விளம்பரங்கள் பெற்றுத் தருவதிலும் கிடைக்கும் தொகை தனக்குப் போதுமானதாக உள்ளதென்றும், தன்னிடம் இருக்கும் செல்ஃபோனை கூட ஆடம்பரப் பொருளாகத் தாம் நினைப்பதாகவும் கூறுகிறார்.

சந்திப்பு, படங்கள்: **கி. சிங்காரவடிவேல்**

# TDFC ல் இன்றைய முதலீடு நாளைய வாழ்வின் நம்பிக்கை

36 மாதம்
அதற்கு மேல்.

**11.61%**

11.50% மாதாந்திர வட்டி உண்டு.
12 மாதம் 10.08% மற்றும்
24 மாதங்கள் 10.59%
காலாண்டிற்கு

• Registered with RBI as NBFC vide Regn. No.:07.00403

60
மாதங்களுக்கு.

**15.44%**

வருட வட்டி
11.50% மாதந்தோறும்
கூட்டு வட்டி
முறையில்
கணக்கிடப்படும்.




## தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை,
எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.
தொலைபேசி : 8292059, 8292917, 8293351,
பேக்ஸ் : (044)8293651 தந்தி :TAFCON. P.B.No.719.
E-mail:tdfc@giasmd01.vsnl.net.in

**கிளைகள் :**

★ அரசு விரைவு பேருந்து நிலையம், காந்திபுரம், கோயம்புத்தூர்-641 044.
தொலைபேசி : (0422) 497102

★ அரசு விரைவு பேருந்து நிலைய வளாகம், திருச்சி-620 001.
தொலைபேசி:(0431) 464188

★ ராணி மங்கம்மாள் சத்திரம், மதுரை-625 001. தொலைபேசி: (0452) 741686

★ நகராட்சி அலுவலக வளாகம், காமராஜர் சாலை, ஈரோடு-638 001.
தொலைபேசி : (0424) 258204

- உள்ளூர் காசோலைகள் மற்றும் சென்னை வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
- காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்

இந்த விளம்பரம் கம்பெனிகள் 29.9.2000 தினத்தில் வெளியிடப்பட்ட சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

Visit us at :www.tn.gov.in/www.chennaionline.com/www.aaraamthinai.com/www.southindia.com/www.webulagam.com/www.thegovt.com

# "குவாலிஃபிகேஷன் இல்லேன்னா பசிக்காதா?"

ஏழுபது ஆண்டுகளுக்கு முன் சொந்த ஊரிலிருந்து சென்னைக்குப் புறப்பட்டார் அந்த இளைஞர். சட்டைப் பையில் வெறும் பத்து ரூபாய். (அது கூட, யாரோ நண்பர், அன்போடு திணித்தது!) ஆனால் நெஞ்சு நிறைய உறுதி. 'ஜெயிப்போம்' என்ற நம்பிக்கை. அவரை எஸ்.எஸ். வாசனிடம் அறிமுகப்படுத்தினார் அமரர் கல்கி.

"எங்க பத்திரிகையின் விளம்பரப் பிரிவில் சேர்த்துக் கொள்கிறேன். நூறு ரூபாய் சம்பளம். மூணு மாசம் வேலை செய்யுங்க. திருப்தியாயிருக்கான்னு பார்க்கலாம்..." என்றார் வாசன்.

"எனக்கு 150 ரூபாய் சம்பளம் கொடுங்க. ஒரே ஒரு மாசம் அவகாசம் கொடுங்க போதும்" என்றார் அந்த இளைஞர். 'தன்னை நிரூபிக்க மூன்று மாத அவகாசம் தேவையில்லை' என்று தன்னம்பிக்கையோடு சொன்ன அந்த இளைஞரை உடனே எடை போட்டுவிட்டார் எஸ். எஸ். வாசன்.

விகடன் விளம்பர இலாகாவில் வேலைக்குச் சேர்ந்தார். அவரது அயராத உழைப்பினாலும், வித்தியாசமான அணுகுமுறையினாலும், வெகு விரைவிலேயே பிரதம நிர்வாகியாக உயர்ந்தார். லண்டன் மாநகரத்து விளம்பரங்கள்கூட, ஆனந்த விகடனில் இடம்பெறும் அளவுக்கு உழைத்தார்; புதுமைகள் புகுத்தினார்.

விளைவு...? விகடனின் விளம்பர வருமானம் பெருகியது. குறுகிய காலத்திலேயே எஸ்.எஸ். வாசனின் பெருமதிப்புக்குரியவர் ஆன அந்த இளைஞர்தான் 'கல்கி' சதாசிவம்.

இந்தக் காலத்தில் பெரிய விளம்பர நிறுவனம் செய்யும் பணியை, அந்தக் காலத்தில் தனிமனிதனாகவே செய்து காட்டியவர் 'கல்கி'சதாசிவம். விளம்பரத் துறையில் அவர் செய்த புதுமைகள், வசீகரமான வியாபார யுக்திகள் அலாதியானவை. அவரது சாதனைகளை நினைவுகூறும் விதத்தில் சமுதாய பிரக்ஞைமிக்க சிறந்த விளம்பரங்களுக்கு 'கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளை' விருது வழங்கி கௌரவித்து வருகிறது.

கடந்த ஆண்டு (2000) பத்திரிகைகள் மற்றும் நாளிதழ்களில் இடம் பெற்ற தமிழ், ஆங்கில விளம்பரங்களுள் விருதுக்குரியவை தேர்வு செய்யப்பட்டு, மார்ச் 3 அன்று சென்னை ராக சுதா அரங்கில் நிகழ்ந்த வண்ணமிகு விழாவின்போது மேடையில் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன.



விருதும் பத்தாயிரம் ரூபாய் பரிசும் பெற்ற தமிழ் விளம்பரம், அசோக் லேலண்ட் டபுள் டெக்கர் பஸ்ஸின் பெருமைகளை அழகாகவும் சமுதாய உணர்வுடனும் எடுத்துக் கூறியது அதிசயமில்லை. ஏனெனில் அதைத் தயாரித்து, வெளியிட்டது இந்தியாவின் தலைசிறந்த விளம்பர நிறுவனங்களுள் ஒன்றான ஹிந்துஸ்தான் தாம்ஸன் அசோசியேட்ஸ். ஆனால் அந்த விளம்பரத்துக்கான தனிப்பட்ட பொறுப்பை ஏற்று வடிவமைத்த இந்து பாலசந்திரனின் அப்பாவும் தாத்தாவும் கல்கி சதாசிவம் குடும்பத்துக்கு நெருங்கிய நண்பர்கள் என்ற செய்தியை விழாவுக்கு வந்து விருதைப் பெற்ற அவரே வெளியிட்டது மிக இனிய ஆச்சர்யம்!

ஆங்கில விளம்பரத்துக்கான பரிசும் விருதும் எம்.ஆர்.எஃப் நிறுவனத்தின் 'Smile while you Drive' என்ற விளம்பரத்துக்கு வழங்கப்பட்டது. கோல்ட் ஓயர் நிறுவனம் (இது எம்.ஆர்.எஃப்பின் கிளை நிறுவனம்) சார்பாக அதை வினய் நாக்பால் பெற்றுக் கொண்டு, பத்தாயிரம் ரூபாய் பரிசுத்தொகையை மிஷனரிஸ் ஆஃப் சாரிடி அமைப்புக்கு வழங்குவதாக அறிவித்துவிட்டார்!

ஓராண்டு விளம்பரங்களையும் அலசி ஆராய்ந்து பரிசுக்குரியவற்றைத் தேர்வு செய்த நடுவர்கள் மூவருமே பத்திரிகை

யாளர்கள்! கசிலா ரவீந்திரநாத், சி.ஆர்.எல். நரசிம்மன் இருவரும் வர்த்தக, பொருளாதார கட்டுரைகள் எழுதுவதில் வித்தகர்கள். சாரு கேசி விசுவநாதன் தமிழ்ப் பத்திரிகை உலகின்

களுக்கும் கனமான நினைவுப் பரிசு-கல்கி விநாயகர் பொம்மைகள்!

**வி**ருதுபெற்ற விளம்பரங்களின் உயர்



• அசோக லேலண்ட் விளம்பரம்

• இந்து

ிருது பெறும் கோல்டவயர்



ாக்டர் பத்ரிநாத்



• கே.எஸ். மகாதேவன்




• இசை நிகழ்ச்சி...



மூத்த பத்திரிகையாளர். கனமான பொறுப்பை வகித்த இவர்களுக்கும், வியாபார நோக்குடன் சமுதாயப் பிரக்ஞையையும் இணைத்துக்கொண்ட அசோக் லேலண்ட் மற்றும் எம்.ஆர்.எஃப் நிறுவனப் பிரதிநிதி

நோக்கும் எளிமையான அழகும் அன்றைய விழா முழுவதும் வியாபித்ததைப் பார்க்க முடிந்தது.

இறைவணக்கத்தில் காயத்ரி வேங்கட ராகவன் 'வெள்ளைத்தாமரைப் பூவிலிருப்

பான்' என்று மகாகவியின் எளிய தமிழ்த் துதியைக் கணீரென்று பாட, நிகழ்ச்சி ஆரம்பித்தது.

வரவேற்புரை என்பது சம்பிரதாயமாக இல்லாமல் வெடிச் சிரிப்புகளைக் கிளப்பிய அனுபவப் பகிர்தலாக அமைந்தது. கல்கி சதாசிவத்தின் பேரனும் அறக்கட்டளை தொடங்க காரணகர்த்தாவுமான சங்கர் ராமசந்திரன் தாத்தாவின் பன்முகப் பண்புகளை எடுத்துச் சொன்னார்.

கல்வித் தகுதி அதிகமில்லாத ஒரு நபருக்கு வேலை வாங்கித் தரும்படி ஒருமுறை கேட்டாராம் சதாசிவம். "பையனுக்கு என்ன குவாலிஃபிகேஷன்...?" என்ற வினா எழுப்பப்பட்டபோது சொன்னாராம் :

• போக்குவரத்துப் பிரச்னைக்கு விடை!
- எம்.ஆர்.எஃப் விளம்பரம்

"குவாலிஃபிகேஷன் இருந்தா அவன் ஏன் நம்மகிட்டே உதவி கேட்டு வரப்போறான்...? குவாலிஃபிகேஷன் இல்லைன்னா பசிக்காதா...? நாமதான் அவனுக்கு உதவி செய்யணும்..." என்றாராம்!

தகுதியை ஏற்படுத்திக் கொள்ளும் சந்தர்ப்பம் இல்லாதவர்களுக்குத் தயையால் உதவிய சதாசிவம், தகுதியும் உயர்நோக்கும் பொதுச் சேவை இலக்கும் கொண்ட திட்டங்களையும் தவறாமல் ஆதரித்தார். அந்த ஆதரவில் உருவான ஒரு நிறுவனம் சங்கர நேத்ராலயா.

நிகழ்ச்சிக்குத் தலைமையுரை ஆற்றிய சங்கர நேத்ராலயா நிறுவனர் டாக்டர் பத்ரிநாத், சதாசிவம் - சுப்புலக்ஷ்மி தம்பதி தமது நிறுவனத்துக்கு அளித்த உதவிகளுடன் அவர்களுடைய உயர்வுகளையும் பட்டிய லிட்டார். கல்கி சதாசிவத்தின் கொடை உள்ளம், அவருடைய ஆளுமை, நகைச்சுவை உணர்வு, காஞ்சி முனிவரிடம் அத் தம்பதி கொண்டிருந்த பக்தி, அந்த மகானின் பரிபூரண ஆசியைப் பெற்ற அவர்களுடைய பாக்கியம்... என்று கல்கி சதாசிவத்தை குளோஸ் அப்பில் படம் பிடித்தார்!

அடுத்து உரையாற்றிய இசை விமர்சகர் கே.எஸ்.மகாதேவன், சதாசிவத்தின் அறுபது ஆண்டு குடும்ப நண்பர். எனினும் தாம் அவருடன் அதிகம் பேசியதில்லை; அவர் முன் அமர்ந்ததுகூட இல்லை என்று சொல்லி ஆச்சர் யப்படுத்தினார். வார்த்தைகளைக் கடந்த வாத்ஸல்யத்துடன் சதாசிவம் தம்பதி தமக்கும் தமது குடும்பத்தினருக்கும் உதவியதை கே.எஸ். மகாதேவன் உணர்ச்சி மேலிட விவரித்தபோது, நிரம்பி வழிந்த அரங்கில் பலர் அந்த உணர்வை எதிரொலித்து மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக்கியதைக் காண முடிந்தது.

தம்மை அறிந்த ஒவ்வொரு குடும்பத்துக்கும் அவர் 'தாத்தா'வாகவே இருந்ததை நினைவூட்டி, பேத்தியும் அறக்கட்டளையின் அறங்காவலர்களுள் ஒருவருமான லக்ஷ்மி நடராஜன் நன்றியுரை வழங்க, நிகழ்ச்சியின் இரண்டாவது பகுதியாக சுதா ரகுநாதன் குழுவினரின் கச்சேரி ஆரம்பித்தது.

பக்கால ராமதாஸ் வயலினிலும் நெய்வேலி ஸ்கந்தசுப்ரமண்யம் ம்ருதங்கத்திலும் வடம் பிடிக்க, ஒரு தேர்த் திருவிழாவின் வண்ணமும், வனப்பும், மிடுக்கும், கோலாகலமும் கலந்த இசை நிகழ்ச்சி பந்துவராளி, அடாணா, சங்கராபரணம் என்று முன்னேறி சதாசிவம் - எம்.எஸ். தம்பதியுடன் என்றும் தொடர்பு படுத்தப்படக்கூடிய 'குறையொன்றுமில்லை', 'மைத்ரீம் பஜத' போன்ற பாடல்களில் வலம் வந்து, 'வாழிய செந்தமிழில்' நிறைவடைந்தது.

அரங்கம் நிறைந்து வெளியே தாழ்வாரத்திலும் சாலையிலும் கூட ரசிகர்கள் நின்று கொண்டே நிகழ்ச்சியை முழுதும் அனுபவித்தார்கள்.

அறக்கட்டளையின் பணிகள் விரிவடையவும் தொடரவும் உதவுங்கள் என்ற கோரிக்கைக்கிணங்கி, வீடு திரும்பும் முன்னரே அறங்காவலர்கள் கையில் நன்கொடைகளைத் திணித்து விட்டுப் போனார்கள் பலர்!

அந்த நல்லிதயங்களை இயக்கியது விழா நாயகரின் வசீகரம் மட்டும் அல்ல, அவருடைய வழிகாட்டலும்தான் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

— அபிநயா
படங்கள்: யோகா

சினிமா உலகத்தைப் பொருத்தவரை, ஏதேனும் மினி தேவதையின் கடைக்கண் பார்வை விழுந்துவிட்டாலே அழகாய் ஒரு ரவுண்டு வந்துவிடலாம். அதிலும், ஐஸ், சிம்ர, ஜோ, சௌந்தர்ய, லைல, மோன போன்ற அதிர்ஷ்ட தேவதைகளின் பரிபூரண ஆசி கிடைத்துவிட்டால்...? அதுதான் டப்பிங் கலைஞர் சவிதாவின் கூடாரத்தில், பொன்மாரி பொழிகிறது.

மும்பை நடிகைகளின் அமோக வரவினால், தமிழ் டப்பிங் பேசும் கலைஞர்களுக்கு ஏக கிராக்கி! அதிலும் பட்டர் ஸ்காட்ச் இளமை, ஸ்ட்ராபெரி குழைவு, வெனிலா இனிமை என்று சவிதாவின் குரல் ஐஸ்க்ரீம் சொட்டுவதால், அம்மணி படுபிஸி.

சவிதாவின் பாட்டி பி.எஸ். பத்மாவதி கர்நாடக இசைப் பாடகி. அந்தக் காலத்தில் வைஜயந்தி மாலாவுக்கு நட்டுவாங்கம் செய்தவர். அவருடன் ஸ்டுடியோவுக்குப் போனபோது, தற்செயலாக டப்பிங் பேச அழைக்கப்பட்டு, பேபி சுஜிதாவுக்கு வாய்ஸ்

# அதிர்ஷ்ட தேவதைகளின்

“ஸ்பீடா, கோபமா
கீச்சுகீச்சுன்னு
பாமரேனியன்
குட்டி மாதிரி
கத்தினேன்.
ஆனா அந்த
டயலாக்
பாப்புலர்
ஆயிடுச்சு. அது
ஜோதிகாவோட
தனி
ஸ்டைலாவே
ஆயிடுச்சு.”

கொடுக்க ஆரம்பித்திருக்கிறார் சவிதா. நடுவே படிப்பு... குரலும் முதிர்ச்சி அடையாமல் இரண்டுங் கெட்டானாக இருக்கவே, சின்ன இடைவெளி விழுந்துவிட்டது.

# குரல்!

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் எம்.பி.ஏ. படித்துக் கொண்டிருந்தபோது, 'ஜீன்ஸ்' படத்தில் ஐஸ்வர்யாராய்க்கு டப்பிங் பேச மறுபடியும் வாய்ப்பு வந்திருக்கிறது.

"ஐஸ்வர்யாவுக்கு டப்பிங் பேசணும்னு சொன்னபோது, கொஞ்சம் டென்ஷனாத்தான் இருந்தது. வாய்ஸ் டெஸ்ட்டுக்கு நிறைய பேர் வந்திருந்தாங்க. முதல்ல, பைலட் டிராக் போட்டுக் காட்டினாங்க. ஐஸ்வர்யா குரலை உன்னிப்பா கேட்டேன். அவங்க குரலை, அந்த ஸ்டைலை அப்படியே இமிடேட் பண்ணிப் பேசினேன். டைரக்டர் ஷங்கருக்கு ரொம்ப பிடிச்சுப் போச்சு. 'ஜீன்ஸ்' படம் பார்த்தவங்கல்லாம், ஏதோ ஐஸ்வர்யாவே தமிழ் பேசி நடிக்கிறதா நினைச்சுட்டாங்க. அந்த அளவுக்குக் குரல் பொருத்தமா இருந்துச்சு" என்றார் சவிதா சந்தோஷமாக.



சம்பந்தப்பட்ட நடிகைகளின் குரலையே 'மிமிக்ரி' செய்ய முயன்றால் வித்தியாசமான காம்பினேஷன் குரல்கள் கிடைத்துவிடுகின்றன. இதுவே சவிதாவின் வெற்றி ஃபார்முலா வாகிவிட்டது. சிம்ரன், ஜோதிகா, ஹீரா, இஷாகோபிகர், சௌந்தர்யா என வரிசையாய்த் தொடர்ந்தாலும், 'வாலி'யில் சிம்ரனுக்குப் பேசிய போதுதான் சவிதா பிரபலமானார். 'சிம்ரனின் நடிப்பு பாதி; சவிதாவின் குரல் மீதி' என்று பாராட்டுகள் குவிந்தன. சிம்ரன் தப்பாக நினைத்து விடக் கூடாதே என்று பயந்து கொண்டே இருந்தபோது, திடீரென்று ஒரு ஃபோன் கால்... அதுவும் நடு நிசியில்.

"நான் யாரு தெரியுதா? கெஸ் ஹூ? எனக்காகப் பேசறீங்க; என் குரல் அடையாளம் தெரியலையா?" என்று கேட்டது அந்தப் பெண் குரல்.



எனக்குத் தூக்கக் கலக்கம். உண்மையிலேயே கண்டுபிடிக்க முடியவில்லை. 'ஹாய்! நான் தான் சிம்ரன். 'வாலி'யிலே உங்க வாய்ஸ் பிரமாதம்' என்று மனப் பூர்வமாகப் பாராட்டியதோடு, தெலுங்கிலும் தனக்கு டப்பிங் பேச வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்" என்றார் சவிதா.

ஜோதிகாவுக்கு ஆரம்பத்திலிருந்தே சவிதா குரல்தான்.

"சிம்ரனுக்குக் கொஞ்சம் மெச்சூர்ட் வாய்ஸ். ஆனா ஜோதிகாவுக்கு நேர் எதிர். கள்ளக்குரல்ல, வேகமா பேசணும். 'குஷி' டைரக்டர் சூர்யா, தான் நினைக்கிற எஃபெக்ட் கிடைக்கிற வரை விடவே மாட்டார். 'நீ பாத்தே... என் இடுப்ப பாத்தே. தெரியும்... பாத்தே'னு ஸ்பீடா, கோபமா இச்சுகிச்சுன்னு பாமரேனியன் குட்டி

மாதிரி கத்தினேன். ஆனா அந்த டயலாக் பாப்புலர் ஆயிடுச்சு. அது ஜோதிகாவோட தனி ஸ்டைலாவே ஆயிடுச்சு." என்று சந்தோஷப் பெருமூச்சு விட்டார் சவிதா.

"சரி, ஜோதிகா, சிம்ரன் இரண்டு பேருமே சேர்ந்து நடிக்கிற 'ஜீவா' படத்துல என்ன செய்யப் போறீங்க?"

"ஜோதிகாகூட போன் பண்ணி, 'யாருக்குப் பேசப் போறீங்க?'ன்னு கேட்டாங்க. அதையெல்லாம் டைரக்டர்தானே முடிவு பண்ணணும்? 'பார்த்தேன், ரசித்தேன்.' படத்துல லைலா, சிம்ரன் இரண்டு பேருக்குமே நான்தான் டப்பிங் பேசினேன். ஒருத்தருக்குக் குறும்பா, இன்னொருத்தருக்கு விஷமமா, வித்தியாசப்படுத்தி பேசினதால, யாராலும் கண்டு பிடிக்க முடியலை. இதுலயும் ஜோதிகா, சிம்ரன் இரண்டு பேருக்கும் என்னால பேச முடியும்."

சவிதா பேசப் போகும் இடங்களில், நடிக்கவும் அழைப்புகள் வருகின்றன. பார்த்திபன், கே.எஸ்.ரவிகுமார், பாக்யராஜ், சரத்குமார், விஜய்காந்த், ராமராஜன்... இவர்கள் எல்லாம் சவிதாவை நடிக்க கூப்பிட்டார்களாம்.

ஆனால் சவிதாவின் சாய்ஸ், டப்பிங் வாய்ஸ் மட்டும்தானாம்.

சவிதாவுக்குச் சின்ன மனக்குறை இருக்கிறது.

"டப்பிங் ஆர்டிஸ்ட்டுகளும் கிட்டதட்ட நடிகர்கள் மாதிரிதான். ஆனா எங்களுக்கு 'கலைமாமணி' போன்ற விருதுகள் தரப்படுவதில்லை. 'அப்படியொரு பிரிவே இல்லை' என்கிறார்கள். பின்னணியில் இருந்தாலும் நாங்களும் கலைஞர்கள் தானே?" என்று வருத்தப்படுகிறார்.

"சம்பந்தப்பட்ட கதாநாயகியின் குரலை 'மிமிக்ரி' செய்து டப்பிங் பேசிக் கொண்டிருப்பது நல்ல டெக்னிக்தான். உங்க ஒரிஜினல் குரல்ல யாருக்காக, எப்போது பேசப் போறீங்க?"

பதில் பேசாமல் யோசிக்க ஆரம்பித்தார் சவிதா!

- அனு

அட்டை, வண்ணப்படங்கள் : ஸ்ரீஹரி




2001 மார்ச் 18
விக்ரம பங்குனி 5
மலர் : 59
இதழ் : 33


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ஜெயலலிதாவின் அபத்த ஃபார்முலா!

'முதுகு உடையும்வரை வளைந்து கொடுப்பதா?' என்று கோபப்பட்ட 'ஜெ'. இன்று வேறு பல்லவி பாடுகிறார் :

தமிழ்நாட்டுக்கொரு கூட்டணி; பாண்டிச்சேரிக்கு வேறு கூட்டணி... அதிலும் பாண்டிச்சேரியின் முதல்வர் பதவியை இரண்டரை ஆண்டுகளுக்குச் சரிசமமாகப் பங்கு போட்டுக் கொள்ளலாம் என்கிறார்!

முப்பது தொகுதிக்கு மேல் ஒன்றுகூட கிடையாது என்று மிரட்டியவர், இன்று நாற்பத்தைந்து இடங்களை ஒதுக்கி, 'த.மா.கா. முடிவுக்குக் காத்திருக்கிறேன்' என்கிறார்.

வரவிருக்கும் தேர்தலில் அ.தி.மு.க. கூட்டணிக்குத் த.மா.கா. + காங்கிரஸின் ஆதரவு மிக முக்கியமாகத் தேவை என்பதையே 'ஜெ' செய்து கொண்டுள்ள 'சமரசங்கள்' உணர்த்துகின்றன.

எப்படியேனும் பதவியில் அமர்ந்துவிட வேண்டும். அதற்குரிய இடங்களைப் பெற எந்த கட்சியுடனும் கூட்டு வைத்துக் கொள்ளலாம், என்ன சமரசமும்




செய்து கொள்ளலாம் என்கிற போக்கு மிகத் தவறான அரசியல் பாதை என்பதைச் சொல்லத் தேவையில்லை.

கூட்டணிக்கு ஒரு பலம் வாய்ந்த கட்சியின் ஆதரவைப் பெற, முதல்வர் பதவியைக் கூறுபோடுவது மிகத் தவறான முன்னுதாரணமாக அமையும்.

'பதவியில் இருக்கும் காலம் பணம் பண்ணும் காலம்' என்று கணக்கு போட்டு காய்கள் நகர்த்தப்படுவது தெளிவாகவே தெரிகிறது. வேறு மாநிலங்களில் இந்த நடைமுறை அமுலில் இருப்பதால் பாண்டிச்சேரியிலும் அதை நடைமுறைப் படுத்தலாம் என்று சொல்வது அபத்தம். நமது நடத்தையை நியாயப்படுத்த சிறந்த முன்னுதாரணங்களைப் பின்பற்ற வேண்டுமே தவிர, தவறான - மோசமான முன்னுதாரணங்களை அல்ல. கூட்டணி என்பது கொள்கைகளின் அடிப்படையில் அமைய வேண்டுமே தவிர முதல்வர் பதவியைப் பங்கு போடுவதன் அடிப்படையில் அல்ல!

ஜெயலலிதாவின் இந்த நடவடிக்கைகளால் காங்கிரஸ் ஏகமாக அதிருப்தி அடைந்திருப்பதில் ஆச்சர்யமில்லை. பா.ம.க.வுடன் கூட்டணி அமைப்பதும் ஆட்சியைப் பங்கு போடுவதும் நடக்காது என்று குலாம் நபி ஆசாத் தெளிவாகக் கூறிவிட்டார். அ.தி.மு.க. கூட்டணியில் இடம் பெறும் கம்யூனிஸ்டுகளின் இரு பிரிவுகளும் முணுமுணுக்க ஆரம்பித்துவிட்டன.

மூடிய வாயைத் திறக்காமலிருக்கும் மூப்பனார், ஜெயலலிதாவின் புதிய ஃபார்முலாவை பத்து ஜன்பத்துக்கு விவரித்து ஆமோதிப்பும் ஆதரவும் பெற்றுவிடக்கூடும். பாண்டிச்சேரி விவகாரம் வேறு, தமிழக விவகாரம் வேறு என்று பிரித்துப் பார்க்குமாறு காங்கிரசுக்கு அவர் யோசனை கூறக்கூடும்.






வரவிருக்கும் சட்டமன்றத் தேர்தலில் இந்த ஒட்டுத்துணி கூட்டணியானது தப்பித்தவறி வெற்றி பெற்றுவிட்டால், பின் தொடர்கிற ஆட்சியானது எப்படி இருக்கும்?

பாண்டிச்சேரி குழப்பம் ஒரு புறம். தமிழக சட்டமன்றத்தில் பிரதான கட்சியாக அ.தி.மு.க. இயங்க, பரிவார கட்சிகளான த.மா.கா.வும், கம்யூனிஸ்டுகளும், பா.ம.க.வும் ஆட்சியில் பங்கேற்கவும் முடியாது; ஆளுங்கட்சியின் குற்றங்குறைகளைச் சுட்டிக்காட்டவும் முடியாது.

ஜெயலலிதா முதல்வராக இருக்கும் ஓர் அவையில் அத்தகைய ஆரோக்கியமான ஜனநாயகம் சாத்தியமில்லை என்பதை ஏற்கெனவே பார்த்திருக்கிறோம்.

மாறாக, 1996 சட்டமன்றத் தேர்தலுக்குப் பிறகு, தி.மு.க. ஆதரவு கட்சியாக சட்டமன்றத்தில் அமர்ந்த த.மா.கா., தவறுகளைச் சுட்டிக் காட்டி, தட்டிக்கேட்டு, ஆளுங்கட்சியை நல்வழிப்படுத்திய ஆரோக்கியமான எதிர்க்கட்சியாகவே செயல்பட்டது. அழகிரி, சொக்கர் போன்ற அவை உறுப்பினர்களின் அர்த்தமுள்ள எதிர்ப்பை தி.மு.க. அமைச்சர்களும் முதல்வரும் கவனமாகக் கேட்டு பதிலளிக்க வேண்டியிருந்தது. அத்தகைய கட்டுப்பாட்டுக்குள் செயல்பட்டதால்தான் தி.மு.க. ஆட்சியும் பாதை தவறிப் போகாமல் பல முனைகளில் நற்பெயர் பெற்றிருக்கிறது.

ஜனநாயக அமைப்பில் ஆட்சிப் பொறுப்பு எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியமானது எதிர்க்கட்சியின் பொறுப்பு. இன்னும் சொல்லப்போனால், ஆரோக்கியமான எதிர்ப்பு என்பது ஆட்சிப் பொறுப்பைக் காட்டிலும் முக்கியம்.

தமிழ் மாநில காங்கிரஸ் தலைவருக்கு இது ஏன் மறந்து போயிற்று...?

ஸ்ரீரங்கம் கோயில் மஹா சம்ப்ரோட்சணத்துக்கு (மார்ச் பதினைந்தாம் தேதி) துரித கதியில் வேலைகள் நடந்து வந்த சமயம்... கோயிலுக்கென பார்க்கப்பட்ட ப்ரச்னம் (நிமித்தங்கள்) வாயிலாக வெளி வந்த உண்மைகள் ஸ்ரீரங்க பக்தர்களிடம் அதிர்வலைகளை ஏற்படுத்தின.

'வைஷ்ணவ ஆலயங்களில் முதன்மையானதும், தலைமை பீடமானதுமான ஸ்ரீரங்கம் கோயிலுக்கு ப்ரச்னம் பார்த்தது தவறு' என்று சொல்கிறார்கள் ஒரு சிலர். 'சரியே' என்கிறார்கள் வேறு சிலர். மூன்றாவது அணியினரோ (தேர்தல் நேரமோ?) 'சரியோ, தவறோ! பார்த்தாகிவிட்டது. வெளிச்சத்துக்கு வந்துவிட்ட தவறுகளை, குறைகளைக் கோயில் நிர்வாகம் எவ்விதத்தில் நிவர்த்தி செய்யப் போகின்றது?', என்கிற கேள்வியை எழுப்பியுள்ளனர்.

கேரளாவிலிருந்து என்.கே.உன்னி கிருஷ்ணன் (பணிக்கர்) மற்றும் இருவர் இணைந்த நிமித்தங்கள் பார்த்து அறுதியிட்டுக் கூறும்



# பிரச்னைகள் கிளப்பும் பிரச்னம்!



பிரச்னக் குழு ஒன்று பிப்ரவரி 7, 8, 9 ஆகிய தேதிகளில் ஸ்ரீரங்கத்தில் முகாமிட்டு, கோயிலுக்கு அஷ்டமங்களப் பிரச்னம் பார்த்துக் கூறியுள்ளது. நல்லெண்ணத்தின் அடிப்படையில் இது விஷயமாக ஏற்பாடுகள் செய்து தந்தவர் டி.வி.எஸ். குரூப் வேணு ஸ்ரீனிவாசன் என்கிறார்கள்.

பதினாறு வகையான 'தியரி'களைப் பயன்படுத்தி பிரச்னம் பார்த்ததில் ஏறத்தாழ நூற்றைம்பது குறிப்புகள் வெளிப்பட்டனவாம். இரண்டரை நாள் பிரச்னத்தை உடனிருந்து கேட்டவர்கள். எந்தவொரு குறிப்பிலும், நிகழ்ந்த உண்மைக்கு மாறாக ஒரு வார்த்தை கூட கூறப்படவில்லை என்று ஆச்சர்யப்படுகிறார்கள்.

முப்பத்தியாறு லட்சணங்களுடன் இருந்த ரெங்கனின் சயனத்திருமேனி பதினாறு லட்சணங்களில் ஹீனமாகி உள்ளது. மூலவர்



மற்றும் உற்சவப் பெருமாளுக்கு உரித்தான நகை ஆபரணங்கள் மற்றும் அலங்காரங்கள் போன்றவை வகுத்துக் கொடுக்கப்பட்டுள்ள விதிமுறைப்படி முற்றிலுமாகச் சரிவர சாற்றுவதில்லை. இப்படிப்பட்ட பல குறைகளும், குற்றங்களும் இந்தப் பிரச்னத்தின் மூலமாக நீண்டதொரு பட்டியலாக வெளிப்பட்டுள்ளது.

"பொதுவாகத் தமிழ்நாட்டுக் கோயில்களில் பிரச்னம் பார்ப்பது வழக்கமில்லை என்றாலும் வேதத்தின் ஓர் அங்கமான ஜோதிட சாஸ்திரத்தில் இம்முறை ஒப்புக் கொள்ளப் பட்டுள்ளது. தனி நபருக்கு ஜாதகம் கணிப்பது போல் ஊர்ப் பொதுவுடைமையான கோயிலுக்கும் பிரச்னம் பார்ப்பதில் தவறில்லை. கடந்த காலத்தில் அவ்வப்பொழுது நிகழ்ந்த தவறுகளை எவ்வாறு திருத்திக் கொள்ள வேண்டுமென்பதை இதன் மூலம் நாம் தெரிந்து கொள்ளலாம். குறைபாடான விஷயங்களில் உடனடி நடவடிக்கை எடுத்து அவற்றை நிவர்த்தி செய்யவும் இது ஒரு வாய்ப்பாக அமைந்துவிட்டது. தவறுகளை பிரச்னத்தில் தெளிவாகக் கூறியதுடன், அதற்கான தீர்வுகளை ஸ்ரீ வைஷ்ணவ நெறிகளுக்கு உட்பட்டே செய்து கொள்ளச் சொல்லியிருப்பதும் வரவேற்கத்தக்கது!" என்கிறார் வைஷ்ணவ ஸ்ரீ அ. கிருஷ்ணமாச்சாரி.

கோயிலின் பரம்பரை அர்ச்சகர்களில் ஒருவரான முரளி பட்டர் என்பவரைச் சந்தித்தோம். "கோயில் நடைமுறைப்படி பெருமாளுக்கு நித்தியப்படி திருவாராதனங்கள், நைவேத்யங்கள் சரிவர செய்யப்படவில்லை என்பது பிரச்னத்தில் வெளிப்பட்ட உண்மை. அதற்கென நிர்ணயிக்கப்பட்ட கால அளவுகளை முறைப்படிக் கடைபிடித்து பூஜிக்க கோயில் பட்டர்கள் ஆகிய நாங்கள் எப்போதும் தயார். கோயில் நிர்வாகம் கட்டண சேவை வசூலை கணக்கில் கொண்டு இரண்டு கால பூஜைகளை ஒரே காலத்தில் செய்து முடிக்கும்படி எங்களைக் கட்டாயப்படுத்தி செயல்படுத்துகின்றது. பிரச்னத்தில் வெளிவந்த குறைகளை நிவர்த்தி செய்வதென்பது கோயில் நிர்வாகத்தின் வசமே இருக்கின்றது." என்கிறார் அவர்.

கோயில் ஸ்தானிகர்களில் ஒருவரான சம்பத்குமார் என்பவரை சந்தித்தோம். பொரிந்து தள்ளிவிட்டார் அவர். "ஸ்ரீரங்கம் கோயிலில் இதுவரை பிரச்னம் பார்த்ததே இல்லை. கோயில் அர்ச்சகர்கள், ஸ்தலத்தார்கள் மற்றும் கைங்கர்யபரர்கள் எவரிடத்தும் ஆலோசிக்காமல் பிரச்னம் கேட்டது தவறு. 1974ல் யுனெஸ்கோ நிறுவனத்தினர் இருபது கோபுரங்களுக்கும் பார்க்க லட்சணமாக ஒரே வர்ணம் அடித்திருந்தனர். இப்போ கோபுரப் பெயிண்டிங் எப்பிடி இருக்குன்னு போய்ப் பாருங்க. கண்ணை உறுத்துது. மேற்கொண்டு கோயில் கும்பாபிஷேகத்தைத் தேய்

பிறையில் (கிருஷ்ணபக்ஷம்) வைத்திருக்கிறார்கள். இதுவரைக்கும் தேய்பிறையில நடந்ததில்லே. போதும் போதாதுன்னு பிரச்னம் சொன்னவா 'மார்ச் 15 கும்பாபிஷேகம் நடத்தக் கூடாது. மீறி நடத்துனா ரோகிணி, மிருகசீரிஷம், ரேவதி, உத்திராடம் ஆகிய நான்கு நட்சத்திரங்கள்ல பிறந்த பெருந்தலைவர்கள் ரெண்டு பேரோட உயிருக்கு ஆபத்து நேருவது நிச்சயம்'னு சொல்லியிருக்காங்க. இதையெல்லாம் கோயில் நிர்வாகம் காதுல வாங்கிண்டதாத் தெரியலை!" என்று சொல்கிறார் அறுபத்து மூன்று வயதான ஸ்தானிகர் சம்பத்குமார்.

தம் பெயரைக் குறிப்பிட விரும்பாத அர்ச்சகர் (பட்டர்) ஒருவர் கூறிய வார்த்தைகள் கவனத்தில் கொள்ளத்தக்கதாக இருந்தது.

"பல வகைகளிலும் ஸ்ரீரங்கம் கோயிலுக்கு நன்கொடை தருபவர்கள் எவரும் வடகலை, தென்கலை பார்த்துத் தருவதில்லை. ஆனால் கோயிலுக்குள் இருப்பவர்கள் வடகலை - தென்கலை வேறுபாடுகள் கொண்டு ஒவ்வொரு விஷயத்தையும் அணுகுவது வேதனை தரத்தக்கது. நம்மிடமும், நமது வருங்கால சந்ததியிடமும் இந்த வடகலை தென்கலை வித்தியாச மனத்துவேஷத்தை அறவே எழாமல் செய்வதே நமது முதல் கடமையாகக் கருத வேண்டும்!" என்கிறார் அவர்.

"ஸ்ரீரங்கம் கோயிலுக்கு பிரச்னம் பழக்கத்தில் இல்லையே தவிர, பார்த்த பின்னர் அதில் குறிப்பிட்ட குறைகளை அகற்றுவதுதான் நல்லது. உள்ளே இருக்கும் கர்ப்பக்கிரக மூலஸ்தானம் முதல் ராஜகோபுரம் வரைக்கும் கும்பாபிஷேகத் திருப்பணிகள் ஆகம விதிமுறைப்படி நடைபெறவில்லை. கும்பாபிஷேகத்தை முன்னிட்டு ஒரு மாதத்திற்கு மூலவர் சேவை இல்லை என்று வாசலில் போர்டு வைத்துள்ளனர். ஆனால், மூலவர் சேவையென தினசரி கட்டணம் வசூலிக்கிறார்கள். சயனத் திருமேனி கொண்ட மூலவர் முற்றிலும் சுதைச் சிற்ப சாஸ்திர வடிவில் ஆனவர். இதில் மராமத்து வேலைகள் செய்யவோ, முழுவதும் புதியதாய்ச் செய்யவோ அதற்குரிய செய்முறைகள் மிகத் தெளிவாக ரிக் வேதத்தில் சொல்லப்பட்டுள்ளது. அதுபோலவே ஸ்ரீரங்கம் கோயிலுக்கென்று பிரத்யேகமாக உள்ள 'பாஞ்சராத்ர பாரமேஸ்வர சம்ஹிதை' எனும் சமஸ்கிருத நூலில் கோயில் விதிமுறைகள் பற்றித் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. மூலவர் திருமேனியில் சுதை வேலைகள் ஆகம விதிப்படி தற்பொழுது நடைபெறவில்லை. மூலிகை சேர்ப்பதிலிருந்து அதைக் கலவை தயாரிப்பது வரை முறைப்படி செய்வதற்கு நாலரை மாதத்திற்கு மேலாகும். இப்பொழுது அனைத்தையும் அவசர அவசரமாக முப்பத்திமூன்று நாட்களுக்குள் முடித்துவிடப் பார்க்கிறார்கள். மேலும், மூலவர் திருமேனியில் சுதை வேலைகள் முற்றுப் பெற்று இறுதியாகச் சாத்தப்படும் தைலக்காப்பு காய்வதற்கு மட்டுமே நாற்பது நாட்கள் தேவையெனக் கூறுகிறது ஆகமம். வெறும் முப்பத்திமூன்று நாட்களுக்குள் பெருமாளின் அனந்த சயனத் திருமேனியை என்ன பாடுபடுத்தப் போகிறார்களோ தெரியவில்லை!" என்கிறார் தமிழக இந்து மக்கள் கட்சியின் திருச்சி மாநகரத் தலைவர் ஆர். சுரேஷ்.

***அரங்கனின் கோயிலுக்குள் இத்தனை அதிரடிகளா என எண்ணிக்கொண்டே, நாம் கேள்விப்பட்ட அனைத்திற்கும் விடை காண விரும்பி தேவஸ்தான அலுவலகத்தில் இணை ஆணையர் முத்துசாமியைச் சந்தித்தோம்.***

**ஸ்ரீரங்கம் கோயிலுக்குப் பிரச்னம் பார்க்க நேர்ந்ததன் அவசியம்..**

ஸ்ரீரங்கம் ராஜகோபுரம் கும்பாபிஷேகத் திருப்பணியை முன்னிட்டு நன்கொடை வேண்டி டிவிஎஸ் குரூப் வேணு ஸ்ரீனிவாசனை அணுகினோம். நவ திருப்பதிகளில் ஒன்றான ஸ்ரீவில்லிபுத்தூர் கோயிலுக்குப் பிரச்னம் பார்த்ததை நம்மிடம் தெரிவித்தார். மேலும் அவர் ஸ்ரீரங்கம் கோயிலுக்கும் பார்க்கலாம் என்று எங்கள் ஐடியாவுக்கு விட்டுவிட்டார். பிரச்னம் குறித்து அவர் எதுவும் கட்டாயப்படுத்தவில்லை. இறுதியாக, கோயில் நிர்வாகத்தின் முடிவுதான் பிரச்னம் பார்த்தது.

குறைகளைத் திருத்திக் கொள்ள கோயில் நிர்வாகம் ஏதேனும் நடவடிக்கைகள்

## மாதுரி - II ?

**" 'தபலா முரட்டுத்தனமான வாத்தியம். பெண்களுக்கெல்லாம் சரிப்பட்டு வராது,' என்று சொல்பவர்களைத் தபலாக் கட்டையாலேயே மொத்த வேண்டும்." என்கிறார் அனுராதாபால்.**

**உஸ்தாத் அல்லா ராகா, உஸ்தாத் ஜாகீர் உசேன் போன்ற 'படேவாலா'க்களின் பிரதான சிஷ்யை. இவரது வாசிப்பை முதல் முறை கேட்டதுமே, மயங்கிப் போன எம்.எஃப்.ஹுசேன், தம்முடைய 'கஜகாமினி' படத்துக்குப் பின்னணி இசையில் தபலா வாசிக்க உடனே அட்வான்ஸ் கொடுத்துவிட்டாராம்.**

**- அபி**

எடுத்துள்ளதா?

சில பூஜைகள், சில நைவேத்தியக் குறை பாடுகள் மற்றும் கோயிலுக்கு உள்ளே நடைபெற்ற சில தோஷங்கள் நிவர்த்தி செய்யப்பட வேண்டுமென பிரச்னத்தில் கூறப் பட்டது. இவற்றை நிவர்த்தி செய்தால் ஸ்ரீரங்க பெருமாள் சேக்ஷத்திரம் சம்ப்ரோட்சணத் திற்குப் பின்னர் இன்னும் சிறப்பாக விளங்கும் என்றும் சொல்லப்பட்டது. அதன்படி கருடாழ்வார் சன்னதியில் தினசரி மாலை நேரத்தில் விஷ்ணு சகஸ்ரநாமம் நடைபெற்று வருகிறது. மூலஸ்தானத்தில் நெய் விளக்கேற்றி வழிபடவும் வகை செய்யப்பட்டுள்ளது. மேலும், கொள்ளிடக்கரையில் அமைந்திருக்கும் மணவாள மாமுனிகள் சமாதியைப் பரா மரிக்கவும், அங்கு அவரது சிலையை நிறுவி தினசரி பூஜைகள் நடத்தவும் உரிய நட வடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

**மூலவர் சன்னதியில் இரண்டு கால பூஜை ஒரே காலத்தில் இணைத்து, விதி களுக்கு முரணாக நடத்தப்படுகிறதே? பெரு மாளுக்குக் கோயில் நிர்வாகம் அளிக்கும் 'ஃபாஸ்ட் ஃபுட்டா?'**

'ஃபாஸ்ட் ஃபுட்' அல்ல அது. திருவிழாக் காலங்களில் அவ்வாறு நடைபெற்றது தவிர்க்க முடியாத ஒன்று. மேலும் வெள்ளி, சனி, ஞாயிறுகளில் கூட்டம் அதிகமாக வருகின்றது. சபரிமலை சீஸன் போதும் கூட்டம் அதிகம். பொதுவாக, பக்தர்களின் தரிசன சௌகர் யத்தைக் கருத்தில் கொண்டே அவ்விதம் செய்யப்பட்டு வருகின்றது.



**ஒரு நாளிதழ் பேட்டியில் 'ரகசியமாகப் பார்க்கப்பட்ட தேவப் பிரச்னம் எப்படியோ வெளியே கசிந்துவிட்டது' எனச் செய்தி வெளிவந்துள்ளதே?**

திருப்பணிக் கமிட்டியார், ஸ்தலத்தார், பட்டர்கள் மற்றும் ஸ்ரீ வைஷ்ணவ முக்கியஸ்தர் கள் முன்னிலையில் பகிரங்கமாகப் பார்க்கப் பட்டது. இதனை ரகசியமாகப் பார்க்க வேண்டிய அவசியமில்லை.

**'பெருமாளின் திருமேனியில் மறு சீரமைப்புக்காக சுரண்டி எடுத்தவற்றை என்ன செய்யப் போகிறார்களோ?' என்கிற சந்தேகம் ஸ்ரீரங்கவாசிகளிடம் எழுந் துள்ளதே...?**

1959ல் ஏற்பட்ட தீவிபத்திற்குப் பின்னர் பெருமாளின் திருமேனி படிப்படியாக களையிழந்து வந்துள்ளதாக ஒரு பொதுக் கருத்து பக்தர்களிடையே நிலவியது. அத னால்தான் தற்போது அரங்கனின் திரு மேனியை மறு சீரமைக்கும் எண்ணம் கோயில் நிர்வாகத்துக்கு வந்தது. திருமேனியில் சுரண்டி எடுத்ததை அப்படியே 'சீல்' செய்து வைத் துள்ளோம். எதிர்காலத்தில் மீண்டும் பயன் படுத்த முடியுமானால் அரங்கனின் திருமேனிக் குப் பயன்படுத்தவும் திட்டமிடப்பட்டுள்ளது.

**முப்பத்தி மூன்று நாட்களுக்குள் சுதைச் சிற்ப சாஸ்திர வடிவிலான பெருமாளின் சயனத் திருமேனியைச் சீரமைக்கவே இயலாது என சுதைச் சிற்ப சாஸ்திர ஆகம விதிகள் அறிந்தவர்கள் சொல்கிறார்களே...?**

குமரி முனையில் அய்யன் திருவள்ளுவர் சிலையை வடிவமைத்த கணபதி ஸ்தபதியும், இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் ஸ்தபதியான முத்தையா ஸ்தபதியும் இணைந்தே இந்தச் சீரமைப்புப் பணியில் ஈடு பட்டுள்ளார்கள். முற்றிலும் மாற்றி அமைக்கும் வேலையல்ல இது. அதனால் இந்தக் கால அவகாசமே போதும் என்பது அவர்கள் கருத்து. அதன் அடிப்படையில் பணிகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

**"'மார்ச் 15 கும்பாபிஷேகத்திற்கு உகந்த நாளல்ல!' என்று ப்ரச்னத்தில் சொல்லப் பட்டதாமே!"**

கும்பாபிஷேக தினத்தைப் பற்றிப் பிரச்னத் தில் எதுவும் சொல்லப்படவில்லை என்பதே உண்மை. பிரச்னம் பார்த்தது கும்பாபிஷேகம் என்றைக்கு வைத்துக் கொள்ளலாம் என நாள் குறிக்க அல்ல. நமது கோயில் நடைமுறைகளில் இருக்கும் குற்றங்குறைகளைப் பிரச்னம் மூல மாகத் தெரிந்து கொண்டு அவற்றைத் திருத்திக் கொள்ளவே இந்த ஏற்பாடு செய்து கொண்டோம்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# என்றென்றும் நம்பர் 1 பானம் இதுதானே!



கலப்பில்லை, உடற்கேடில்லை, விலை



மக்கள் நலன் கருதி
வெளியிடுவோர்:
தமிழக அரசு



## இளநீர்

இயற்கை தரும்
இன்சுவை பானம்.
இயற்கை நமக்கு
அளிக்கும் முழுக்க
முழுக்கத் தூய்மையான
பானம். எல்லாக்
காலங்களிலும்
கிடைக்கும்; தாகத்தைத்
தீர்க்கும்; களைப்பைப்
போக்கும்; உடற்சூட்டைத்
தணிக்கும்; உடலுக்கு
ஆரோக்கியத்தையும்
தரும்.

இதன் மருத்துவ
குணங்களோ
மகத்தானவை.

இப்பொழுது
சொல்லுங்கள்.
இளநீருக்கு இணையான
பானம் வேறு உண்டா?

யோ மலிவு – இயற்கை தரும் இளநீர்

# இளங்கோவனை இயக்குவது வாழப்பாடியாமே..?

● நகை நி. மகாராசன், கடமலைக்குண்டு

? 'அவசரப்பட்டு முடிவெடுத்து மக்கள் கோபத்துக்கு ஆளாக விரும்பவில்லை' என்கிறாரே மூப்பனார்...?

! 'பொழுது எப்போது விடியும், சிவன் எப்போது வருவார்' என்று காத்திருந்து, பொழுது விடியும் வழியாகவோ சிவன் வரும் வழியாகவோ தெரியவில்லை என்றதும் ஆத்திரப்பட்டு, நம்முடைய ஆத்திரம் சிவனையோ பொழுதையோ ஒன்றும் செய்யவில்லை என்று புரிந்ததும் ஆத்திரம் எல்லாம் வடிந்து, பரப்பிரம்மமாய், சாந்த ஸ்வரூபியாய் சிவனடியார்கள் கணக்கில் யாமெல்லாம் இருக்கிறோம் பராபரமே!... இதை அவருக்கு யாராவது எடுத்துச் சொல்லும் ஐயா!

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு.

?இடுப்பு முறியும் அளவுக்கு வளைந்து கொடுப்பானேன்?

! இடுப்பு முறிந்தாலும் முதல்வர் 'இருப்பில்' இருக்க வேண்டும் என்ற ஆசை.

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

? இளங்கோவனை இயக்குவதே வாழப்பாடியார் தான் என்ற அன்பரசுவின் புகார் எப்படி?

! உட்கட்சிப் பூசலை சுவாரஸ்யமாய் நீடிக்கச் செய்யும் தடாலடி அறிக்கை!

● த.குணசேகரன், கவுந்தப்பாடி.

? ஆப்கானிஸ்தானில் உள்ள புகழ் பெற்ற 'புத்தர்' சிலைகளைத் தலிபான் அரசு வெடி வைத்துத் தகர்த்து வருவது பற்றி...?

! சரித்திர சின்னங்கள் யாவும் ஒரு நாட்டையோ அரசாங்கத்தையோ ஒரு குறிப்பிட்ட இனத்தையோ சேர்ந்தவை அல்ல – அவை மனித குலத்தின் வரலாற்றையும் மரபையும் பறைசாற்றும் பொதுச்சொத்துக்கள்! அவற்றில் கை வைப்பவர்கள் காட்டுமிராண்டிகள்! உலகத்தில் உள்ள அனைத்து முஸ்லிம்களையும் கூனிக் குறுக வைத்துவிட்டது இந்தக் காட்டுமிராண்டித்தனம்.

● கே. பூநிலா சேகர், பெங்களூர் – 53 ★

? 'த.மா.காவின் கதவைத் தட்டுவதாக இல்லை' என்று தேசிய ஜனநாயக கூட்டணி தலைவரும் முதல்வருமான கருணாநிதி கூறியிருப்பது பற்றி...?

! அந்த அறிக்கை இருமுறை வாபஸாகியிருக்கிறது. இறுதிவரை மு.க த.மா.காவுக்கு வாய்ப்புத் தந்தார் என்பது சரித்திரத்தில் பதிவாகும். தமிழ்நாட்டின் தலைவிதி நோகும்படி ஆயிற்றானால் கலைஞரைக் குறை கூற முடியாது.

● எம். பிச்சைக்கனி, நெமிலி.

? ஊழல், மதவாதம், தீவிரவாதம் – இவை மூன்றில் மிகவும் ஆபத்தானது எது...?

! இம்மூன்றையும்விட ஆபத்தானது இம்மூன்றின் கூட்டணி.

● ஆர். அப்துல் சலாம், திருச்சி – 20.

? முதல் டெஸ்டிலேயே நம்மவர்கள் திணறிப் போய்விட்டனரே...?

! பலாச்சுளை கணக்காக ஆஸி அணியின் முதல் ஐந்து விக்கெட்டுகளை 99 ரன்களுக்குச் சாய்த்துவிட்டு, அதை வெற்றியாக மாற்றிக் கொள்ளத் தெரியாத அணிக்கு முதல் டெஸ்ட், இரண்டாவது டெஸ்ட், மூன்றாவது டெஸ்ட் – எல்லாமே ஒன்றுதான் போங்கள்!

● மல்லிகை மன்னன், மதுரை –17.

? தபால் கார்டின் விலையை 25 காசிலிருந்து ஐம்பது காசாக உயர்த்திவிட்டதால் என்னை மாதிரி ஏழைகள் பத்திரிகைகளுக்கு எழுத முடியாமல் போய்விடுமே... இது ரொம்ப அநியாயமல்லவா...?

! இன்றைய நிலைமையில் ஐம்பது பைசா

★ ரூ. 25 பரிசு பெறுபவர் : கே. பூநிலா சேகர், 12, கிலாரி ரோடு, பெங்களூர் – 53.

☐ ரூ. 50 பரிசு பெறுபவர்: சி.ஜி. பாலசுப்ரமணியன், லலிதா கிருபா, ராகவேந்திரா அபார்ட்மெண்ட்ஸ், பவானி நகர், ஹூப்ளி - 580 023.

# நீங்கள் கேட்டவை — தராசு


• இருப்பும் இழப்பும்!


• எடுத்துச் சொல்லி...


• வழி காட்டும் அதிபர்!


• முகமும் அகமும்...!


• வாபஸ், வாபஸ்!

என்பது அதிகமில்லை. தபால் கார்ட் விலையில் அரசுக்கு ஏற்படும் நஷ்டம் மட்டும் யாரால் தாங்கிக் கொள்ளப் படுகிறதாம்? — வரிப் பணத்திலிருந்துதானே அந்த நஷ்டத்தைச் சரி கட்ட வேண்டும். வரிப் பணம் என்பது மக்கள் பணமே அல்லவா?

● **எம். ராஜேந்திரன், லால்குடி.**

*? அ.தி.மு.க ஆட்சிக்கு வந்தால் தமிழகத்தின் எதிர்காலம்?*

! எதிர்காலம் என்றே ஒன்று இராது. நிகழ் காலத்திலேயே யதேச்சாதிகாரம் அனைத்தையும் விழுங்கி ஏப்பம் விட்டு விடும்.

● **எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.**

*? சட்டசபைத் தேர்தலில் மதுரையில் சுயேச்சை யாகப் போட்டியிட்டு வெற்றி பெற்று, கமிஷன் வாங்காத எம்.எல்.ஏவாக உழைப்பாராமே முதல்வர் மகன் அழகிரி...?*

! நாளைக்கு உழைப்பதெல்லாம் இருக்கட்டும். இன்று பட்டினி கிடந்தவன் 'விரதமிருந்தேன்' என்று சொன்ன கதையாக அல்லவா இருக்கிறது 'சுயேச்சை' சமாசாரம்!

● **தென்றல் நாசர், சங்ககிரி.**

*? தமிழ்நாட்டில் ஜாதிக்கட்சிகள் இல்லாமல் போகும் நிலை வருமா...?*

! ஜாதிக் கட்சிகள் யாவுமே பாகுபாடின்றி சந்தர்ப்ப வாதத்தில் ஈடுபடுவதை மக்கள் கவனித்து மனக்குறிப்பு எடுத்துக் கொள்ள வேண்டும்; பின்னர் தேர்தலில் தங்கள் எதிர்ப்பைக் காட்ட வேண்டும். செய்தால் ஜாதிக் கட்சிகள் தோன்றிய வேகத்தில் மறையும்.

● **சி.ஜி. பாலசுப்ரமணியன், ஹூப்ளி ❐**

*? வட்டி விகிதங்கள் குறைந்தது பற்றி...?*


• 'விரதம்!'

! சர்வதேச நிறுவனங்கள் அயல்நாடுகளில் கடன் வாங்கும்போது வட்டி விகிதம் மிகக் குறைவாக இருக்கிறது. அவர்களோடு போட்டியிடப் போகிற இந்தியத் தொழில்துறை நிறுவனங்களுக்கும் அந்தச் சகாயம் கிடைக்க வேண்டாமா? அது சாத்தியப்பட வேண்டுமென்றால், அவர்களுக்குக் கடன் தரும் நமது வங்கிகளுக்கு, வாடிக்கையாளர்களின் சேமிப்பு வட்டி விகிதத்தைக் குறைப்பதைத் தவிர வேறு வழி இல்லை. தாராளமயமாக்குதலில் நம்முடைய நிறுவனங்கள் தழைக்க நாம் இந்தத் தியாகம் செய்யத்தான் வேண்டும்.

● **பாலா. கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம்.**

*? அரசாங்க தூதருக்கும் அரசியல் தூதருக்கும் என்ன வேறுபாடு...?*

! அரசாங்கத் தூதரின் கடமை தேசம் சம்பந்தப்பட்டதாக இருக்கும். அரசியல் தூதரின் கடமை சுயலாபம் சம்பந்தப்பட்டதாக இருக்கும்.


• கற்பனை வளம்!

● **எம். சிவகுருநாதன், சென்னை – 42.**

*? இலங்கை அதிபர் சந்திரிகா குமாரதுங்கா ஏற்கெனவே ஒரு கண் பார்வையை இழந்தபோதும் மற்றொரு கண்ணை தானம் செய்வதாக பிரதிக்ஞை செய்திருக்கிறாரே...?*

! உலகிலேயே அதிக கண்தானம் செய்கிற நாடு இலங்கைதான் என்கிறபோது சந்திரிகாவின் செயல் another feather in their cap!

● **பிரபா வெங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்.**

*? ஆனந்தம், பேரானந்தம் – விளக்குக?*

! ஜெ அணிக்குத் தாவியதும் ராமதாஸின் முகம் முதலாவதுக்கு எடுத்துக்காட்டு; புதுவையில் மாறி மாறி ஆட்சி ஒப்பந்தம் நிறைவேற்றியதும் 'ஐயா' முகத்தில் வந்தது இரண்டாவது!



ஸ்ரீனுவாச ராகவன் எத்தனை நேரமாகத் தன் பின்னால் நின்றிருந்தார், எந்தெந்தக் கடிதங்களை எல்லாம் படித்தார் என்பதைப் பற்றியெல்லாம் யோசிக்க நேரமில்லை ப்ரீத்திக்கு.

'உன் அப்பாகிட்ட கூட ஒரு லெட்டர் இது மாதிரி பிரிண்ட் அவுட் எடுத்துக் கொடுத்தேனே...'

21

—இந்த வார்த்தைகள்தான் அவளைப் பலமாய்த் தாக்கின... அலுவலகம் முடிவதற்கு முன்பே வீட்டுக்குக் கிளம்பியவள்—அடுத்த இருபதாவது நிமிஷத்தில் வீட்டில் இருந்தாள்.

அனுராதா ரமணன்

# இனிமேல் ஆரம்பம்

மகளின் முகத்தைப் பார்த்தவுடனேயே கேதாரிக்குப் புரிந்து விட்டது.

'போச்சு... இன்னும் கொஞ்ச நேரத்துல வீடு பூகம்பத்துல தரைமட்டமான குஜராத் மாதிரி ஆகப் போறது...'

அவர், கூடுமான வரையில் மகளின் முகத்தை ஏறிட்டுப் பார்ப்பதையே தவிர்த்தார்.

ஆனால் அவளோ... இவரை ஒரு பிடி பிடித்து விட்டுத்தான் மறுவேலை என்பது போல, அவரெதிரில் இடுப்பில் கையை வைத்துக் கொண்டு நின்றாள்.

'உங்களுக்கு என்ன வயசாறது?''

''அ... அதைப் பத்தி சீனுவாச ராகவன் அஜய்யோட லெட்டரைப் பிரிண்ட் அவுட் எடுத்து... பாவி மனுஷன்... அஜய்யோட பாஸ்வேர்டு எப்படி தெரிஞ்சதுன்னுதான் தெரியல்லே...''

''அது ஒண்ணும் பிரும்ம ரகசியம் இல்லேம்மா. உங்க ஸாஃப்ட்வேர் அனலிஸ்ட் பிரபா இருக்காளோல்லியோ...''

மேலும் ஏதோ சொல்ல வந்த கேதாரி- மகளின் முகம், சமீபத்தில் வெளிவந்த பாளையத்தம்மன், பொட்டு அம்மன் போன்ற எல்லா அம்மன்களின் மொத்த உருவமாக இருக்கக் கண்டு 'பொக்'கென அடங்கினார். தலைகுனிந்தார்.

'இனிமேலும் மறைக்க முடியாது... சரணாகதி ஒன்றுதான் பிழைக்கும் வழி...'

அவர், பக்கத்துச் சிறுவனைப் பார்த்து காப்பியடித்து பிடிபட்ட மாணவன் போல மகள் முன் கூசிக் குறுகி, தரை நோக்கித் தலை கவிழ்ந்து புலம்பினார்.

''அந்த லெட்டரை நீயும் காட்டினே... மிஸ்டர் சீனுவாச ராகவனும் காட்டினார்... காட்டினாரரா... என்ன திடீர்னு... போய் கை கால் அலம்பிண்டு வா... சூடாக் காபியும், மெது பகோடாவும் தர்றேன்...''

மெள்ள நழுவியவரின் கரத்தைப் பிடித்து இழுத்து நிறுத்தினாள் அவள்- நேரே-சுத்தியைச் செருகுவது போல கேதாரியின் கண்களுக்குள் பார்வையை இறக்கினாள்.

''ஆபீசே நார்றது..''

''அய்யோ, ஏன்... எலி கிலி செத்து வச்சுடுத்தா என்ன...?''

''நாத்தம் எலி செத்ததுனாலே இல்லே... பெருச்சாளி மாதிரி இருந்துண்டு அந்த எப்படியும் நம்ம பொண்ணை விட்டா வேற எவளுக்கு அந்தக் கடுதாசு வந்திருக்க முடியும்னு அசைக்க முடியாத நம்பிக்கை... அந்தப் பிள்ளையாண்டான் உனக்கு மெயில் கொடுத்து, நீ பதில் கொடுத்து... எல்லாமே ரொம்ப மெதுவாப் போனாப்பலத் தோணிடுத்து... என் குழந்தை அனாவசியமாக் காத்துக் காத்து ஏமாறுவதைத் தாங்க முடியலே... அதனாலே..''

கொலைக் குற்றத்தில் அப்ரூவராக மாறிய கூட்டாளி போல-சகலத்தையும் உளறிக் கொட்டி, ஊளறி மூடினார் கேதாரி.

ப்ரீத்தி- அவர் பேசி முடிக்கும் வரையில் இரு கைகளையும் நெஞ்சோடு கட்டியபடி, மௌனமாய் அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

அப்பா....

சின்ன வயசில் தெருப் பிள்ளைகள் அவளை விளையாட்டில் சேர்த்துக் கொள்ள வில்லை என்றால், அவளை ஒரு கையில் பிடித்துக் கொண்டு வந்து, சிறுவர்கள் மத்தியில் சமாதானம் பேசும் அப்பா...

எங்கேயோ எப்பொழுதோ ஒரு பணக்கார மார்வாடி பெண் அணிந்திருந்த உடை போல தனக்கும் வேண்டுமென ப்ரீத்தி சொன்னதால் அவளையும் அழைத்துக் கொண்டு 'மின்ட்' தெருவில் கடைகடையாய் ஏறி இறங்கிய அப்பா...

கல்லூரியில் முதல் வருட பரீட்சைக்கு ஹால்டிக்கெட் வாங்க வேண்டும் என்கிற பிரக்ஞையே இல்லாமல் ஒரு மாசம் போல டைபாயிட் காய்ச்சலைக் கொண்டாடி விட்டு, ஆற அமர பரீட்சைக்கு இரண்டு தினங்களுக்கு முன்னால் கல்லூரிக்குப் போய் உட்கார்ந்தவள், விஷயம் தெரிந்து ஓவென அழுதபடியே வீட்டுக்கு வர, கையில் எடுத்த சட்டையைப் போட்டுக் கொள்ள தோன்றாமல் அப்படியே தோளில் மாட்டிக் கொண்டு கல்லூரிக்கு வந்து பிரின்சிபலிடம் சாமியாடிய அப்பா...

''ஏங்க, ஒரு பொண்ணுக்கு ஹால் டிக்கெட் கொடுக்கலைன்னா ஏன் அந்தப் பொண்ணு பரீட்சைக்கு வரமாட்டாளா என்னன்னு விசாரிக்க மாட்டீங்களா... களை களையா சம்பளம் கொடுக்கல? ரிஜிஸ்தரில் பேர் இல்ல... எங்க அந்த ஹெச்.ஓ.டி. கூப்பிடுங்க அவரை... இந்த செமஸ்டரில் எம் பொண்ணு பரீட்சை எழுதலைன்னா நான் கோர்ட் வரைக்கும் போவேன்...''

இப்படி அவளுக்காகப் பரிந்தும், கவலைப்பட்டும் பின்னாலேயே ஓடிவரும் அப்பா... தன் எதிரே முகம் கருங்கி அழுகையில் நாசி துடிக்க, உதடு கோண, நிற்பதைப் பார்க்கும் பொழுது அடிவயிற்றிலிருந்து அழுகை பொங்கி வந்தது.

'பாவம் அப்பா... எனக்காக தன்னோட சுகத்தையெல்லாம் கூட விட்டு, தனிக்கட்டையா என் காலையே சுற்றிச் சுற்றி வர்றாரே... இவரைவிடவா காதலும், கத்தரிக்காயும் பெருசா போச்சு எனக்கு?''

இப்படியொரு எண்ணம் தோன்றியவுடன் தன்னையும் மீறி 'குபுக்' என சிரித்தாள்...

அவரோ இதை துளியும் எதிர்பாராதவராய்க் குலுங்கி நிமிர்ந்தார்.

"என்னம்மா... அப்படி சிரிக்காதே... பயமாயிருக்கு."

"என்ன பயம்பா?''

அவர் தயங்கியபடி சொன்னார்.

''அது ஒண்ணுமில்லம்மா... ஏமாற்றம் தாங்காம மூளை கலங்கிடுத்தோன்னுதான் பயம்."

அவள் மேலும் கலகலத்துச் சிரித்தாள்.

"ஐய்யோ அப்பா... அஜய் அந்த லெட்டரை எனக்கு எழுதலை... எவளோ பெங்களூர்ல சுஜான்னு ஒரு பொண்ணுக்கு எழுதியிருக்காரு... நான்தான் அவசரப்பட்டு, எனக்கு அனுப்பின மெயில்னு நினைச்சு, உங்ககிட்ட வேற தம்பட்டம் அடிச்சிட்டேன். ஆனா பாவம் அஜய், நான் கொடுத்த பதில் மெயிலைச் சரியாக்கூட படிக்காம பெங்களூர் ஓடியிருக்காரு."

-இப்படி சொன்னவள் பற்களைக் கடித்தபடி முகம் தெரியாத சுஜாவுக்கு லட்சார்ச்சனை செய்தாள்.

"நீங்களே சொல்லுங்கப்பா... அஜய்க்கு என்ன? மவுண்ட்ரோடுலேயோ, ஸ்பென்சர் ப்ளாசாவிலேயோ இவ நடந்து போய்



''இந்த போலீஸ் ஸ்டேஷன் ரொம்ப வசதிகளோட இருக்குதே... எப்படி?''

''ஏரியா ரவுடி கபாலி தத்து எடுத்துருக்கானே, அதனால்தான்!''

– அம்பை தேவா



நமஸ்தே சாரதே தேவி
காஷ்மீரபுர வாசினி
த்வாமஹம் ப்ரார்த்தயே நித்யம்
வித்யா தானஞ்ச தேஹிமே.

இந்த ஸ்லோகத்தை தினமும் சொல்லி, கலைமகளைத் துதியுங்கள். வித்யை கைகூடும். கல்வி சிறந்தோங்கும்.

**அன்பளிப்பு: இந்த இதழுடன்**
**சிருங்கேரி சாரதாம்பாள் வண்ணப்படம்**
**அடுத்த இதழில்**
**பங்காரு காமாக்ஷி அம்மன் வண்ணப்படம்**

பார்க்கனும். என் வயசை ஒத்த பொண்ணுங்க எல்லாம் பொறாமையில விடற மூச்சுல எரிஞ்சு சாம்பலாயிடுவா. இவரோட அருமை தெரியாம அந்தப் பொண்ணு என்னடான்னா- பெரிய மேதாவி மாதிரி- 'நாம ரெண்டு பேரும் வாழ்க்கையில ஒண்ணுசேரவே முடியாது'ன்னு பதில் கொடுத்திருக்கா..."

இவள் கத்த, எச்சிலைக் கூட்டி மென்று விழுங்கிய கேதாரி, மெதுவாக, தான் ஈஸ்வரனை சந்தித்ததையும், அவர் கூறிய சுஜா கதையையும் கூறுகிறார்...

"எனக்கென்னவோ அவங்க ரெண்டு பேரும் ஒண்ணு சேர வழியே இல்லைனு தான் தோணுதும்மா... புத்திசாலித்தனமா அவனை, உன்பக்கம் திருப்பப் பாரு..."

இப்பொழுது ப்ரீத்தி திரும்பி நின்று, அப்பாவைச் சுட்டெரித்து விடுவதுபோல் முறைத்தாள். கையில் தனக்குக் கிடைத்த தக்காளிப் பழத்தை அவர்மீது வீசினாள்.

"காதலிச்ச, அம்மாவைக் கல்யாணம் செஞ்சுகிட்ட உங்களால, அம்மா செத்ததுக்கப்புறம் இன்னொருத்திய மனசாலயாவது நினைச்சுப் பார்க்க முடிஞ்சதா? அதுபோல மத்தவங்களோட விருப்பு வெறுப்புக்கும் மதிப்பு கொடுக்க தெரிஞ்சுக்கோங்க..."

ப்ரீத்தியின் முகத்தை நிமிர்ந்து பார்க்க முடியாமல், கேதாரி பார்வையை எங்கோ செலுத்த, அவளோ ஓடிவந்து அப்பாவின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

"அப்பா... என் செல்ல அப்பா, அஜய் எனக்குக் கிடைக்காததால வருத்தம் உண்டு தான். ஆனால் அதே சமயத்துல நான் அஜய்யை எவ்வளவு விரும்பறேன்னு உங்களுக்கு எப்படி சொல்றதுன்னே புரியலை. ஒரு சின்ன உதாரணம். என்னை விட்டுட்டு நீங்க ஏதாவது கல்யாணம், பார்ட்டினு போனா அங்க பரிமாறற ஸ்வீட் பாக்கெட்டை எனக்குன்னு எடுத்துட்டு வருவீங்க இல்லையா? உங்களுக்கு ஸ்வீட் எவ்ளோ பிடிக்கும்னு எனக்குத் தெரியும். ஆனால் உங்களுக்குப் பிடிச்சதை, நல்லதுன்னு படறதையெல்லாம் எனக்குத் தரணும்னு நீங்க நினைக்கிறீங்க இல்லையா... அதுதான்... அதே மாதிரிதான் இதுவும்."

கேதாரிக்கு இப்பொழுது உண்மையிலேயே அழுகை வந்தது. தன் மகள் இன்னொருத்தருக்காக ஒரு சாக்லேட்டைப் பகிர்ந்து கொள்வதைக்கூட அவரால் தாங்க முடியாது.

ஆனால் அவளோ... தன் சந்தோஷத்தையே ஏன் தன் வாழ்க்கையையே தூக்கிக் கொடுக்கத் தயாராயிருக்கிறாள்.

ஆயுசிலேயே முதல் தடவையாக கேதாரி அழுதார். அவர் மனைவி இறந்தபோது கூட மகளின் கண்கள் கலங்கக் கூடாது என்பதற்காக கண்ணீரை அடக்கிக் கொண்டவர் அவர்.

**ப்**ரீத்தி அன்று அலுவலகத்திற்குப் போன பொழுது அஜய் வந்திருந்தான். முகத்தில் ஐந்து நாள் தாடி... அவனது சோகத்தை மேலும் எடுத்துக் காட்டுவதாய்... அவன் கம்ப்யூட்டரில் அமர்ந்து பழைய மெயில்களில் பார்வையை மேயவிட்டிருக்க... சுஜாவின் பதிலுக்கு முன்பே ப்ரீத்தியின் ஏக்கமும், தாபமும் நிறைந்த கடிதம்.

அவன் அதையே வெறிக்கிறான். ப்ரீத்தியோ அவசரமாய் அந்தக் கடிதத்தை அழிக்கிறாள். அவன் பார்வையில் மெல்லிய அதிர்ச்சி.

(தொடரும்)

# பிரிந்தோமா...?

- பிரிதல் எப்படிச்
சாத்தியம்?
உன்னில் நான்
இன்னும் இருக்கையில்...

- உதடுகள் மறுக்கின்ற
உண்மையை,
கண்ணாடியில் முகம் பார்த்துக்
கண்களிடம் கேள்.

- கோபத்தில் நீ எறிந்த
வார்த்தைக் கனல்துளிகளைக்
குவித்து வைத்திருக்கிறேன்
குளிர் காய்வதற்கு

- நீ தந்த காயங்கள்கூட
ஆறுவதற்கு நான்
அனுமதிப்பதில்லை
அந்த வலிகள் உன்னை
நினைவூட்ட வேண்டுமென்று

- உன் நினைவுகளை
எரித்த சாம்பலிலும்
ஃபீனிக்ஸ் பறவையாய்
நீயேதான் எழுகிறாய்

- பிறகெப்படி நாம்
பிரிந்தோம்
என்கிறாய்...?

— எஸ். பிருந்தா

# பி.டி.ஆர். பழனிவேல்ராஜன்

"ஐந்து வருட கால சபாநாயகர் அனுபவம் பற்றிச் சொல்லுங்களேன்."

"சட்டமன்றத்தில் ஆரோக்கியமான சூழல் நிலவுவதற்கு நல்ல ஆளுங்கட்சி மட்டும் போதாது; நல்ல எதிர்க் கட்சியும் வேண்டும். அந்த வகையில் த.மா.கா. உறுப்பினர்கள் மிகவும் கண்ணியத்துடனும், பொறுப்புடனும் நடந்து கொண்டார்கள். அ.இ.அ.தி.மு.க. உறுப்பினர்கள் வெளியில் எப்படி நடந்து கொண்டாலும் அவைக்குள்ளே சபாநாயகருக்கு உரிய மரியாதையைக் கொடுத்தார்கள். உறுப்பினர்கள் கண்ணியமாக நடந்து கொண்ட காரணத்தால் நானும் தலை நிமிர்ந்து நடக்க முடிந்தது. ஒரு சிறிய கரும்புள்ளி, தாமரைக்கனி, அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகத்தைத் தாக்கியது. எனக்கொரு கூடுதல் பெருமை- என் தகப்பனார் இதே அவையில் 1921ல் உறுப்பினராக இருந்து செயல்பட்டிருக்கிறார். சட்டமன்ற செயல்பாடுகளில் கலைஞருக்கு ஈடு, இணை யாரும் கிடையாது. ஓர் உறுப்பினரும் சபா நாயகரும் பேசிக் கொண்டிக்கும்போது இடையில் யாரும் குறுக்கிடக் கூடாது. இந்த மரபைக் காப்பாற்றியவர் கலைஞர் ஒருவர்தான். இந்த ஐந்து வருட காலத்தில் 'இப்படி நடங்க... அப்படி நடங்க' என்று எனக்கு அவர் சொன்னதேயில்லை. சட்டசபையை நடத்துவதில் எனக்கு முழு சுதந்தரம் இருந்தது. த.மா.காவினர், சட்டமன்றத்தில் ஒரு பொறுப்புள்ள எதிர்க்கட்சியாகச் செயல்பட்டதால் தான் வரும் தேர்தலிலும் அவர்களுடன் கூட்டணி அமைக்கும் முயற்சியை, கலைஞர் அனுமதியுடன், மேற்கொண்டேன்.



## "கூட்டணி தொடர்பாக மூப்பனாரும் என்னுடன் பேசினார்!"

"மூப்பனார்தான் 'அழகிரி பேசியது அதிகாரபூர்வமற்ற பேச்சு' என்று சொல்லி விட்டாரே!"

"அரசியலுக்காக தவறான செய்தியைச் சொன்னார்கள். த.மா.கா. சட்டமன்ற உறுப்பினர் அழகிரி மட்டுமல்ல; மூப்பனாரும் பலமுறை கூட்டணி சம்பந்தமாகப் பேசினார். கடைசியில் 'முறையான பேச்சு நடக்கவில்லை' என்று கூறி என்னை அல்லவா அவமானப்படுத்திவிட்டார்கள்!"

"ஐந்து வருடம் சபாநாயகர் பொறுப்பில் இருந்த நீங்கள், இதுபோன்ற அரசியல் பேச்சுக் களில் ஈடுபடாமல் தொடர்ந்து கட்சி சார்பற்ற முறையில் செயல்பட்டிருக்கலாமே!"

"நான் அடிப்படையில் தி.மு.கவைச் சேர்ந்தவன். பொறுப்பில் இருந்தபோது மனசாட்சியுடன், நடுநிலையாகச் செயல்பட்டேன். நாளை நான் தேர்தலில் நின்றால் என்னை எதிர்த்து அ.இ.அ.தி.மு.க. வேட்பாளரை நிறுத்தத்தானே செய்யும். அது தவிர கடந்த சட்டமன்றத்தின் ஆயுள் முடிந்து விட்டது. கடந்த ஐந்து வருட காலத்தில் எந்தக் கட்சி மேடைகளிலும் நான் ஏறியதில்லை. த.மா.கா தலைவர்கள் நல்ல நட்பு முறையில் பழகியதாலும், தலைவர் கலைஞர் சொன்னதாலும்தான் கூட்டணி பேச்சுவார்த்தைகளில் ஈடுபட்டேன்."

"தி.மு.க-த.மா.கா. கூட்டணி ஏன் உருவாக வில்லை?"

"நான், த.மா.கா. பிரமுகர்களுடன் நடத்திய பேச்சுவார்த்தைகளை இப்போது சொல்வது சரியாகாது. ஆனால் காங்கிரஸையும் இணைத்துக் கொண்டு செயல்பட விரும்புவதாகவும், பா.ஜ.க., தி.மு.க. கூட்டணியில் இருப்பதால் தி.மு.க-த.மா.கா. கூட்டணி ஏற்படுவது சற்று சிரமமான காரியம் என்றும் வெளிப்படையாகச் சொல்லப்பட்டாலும் த.மா.காவுக்கு நாங்கள் கொடுக்க இருந்த இடங்கள் தான் மேற்கொண்டு பேச முட்டுக் கட்டையாக இருந்தன. அவர்கள் கேட்ட இடங்களைக் கொடுப்பது சாத்தியமில்லை."

"த.மா.கா. கூட்டு இல்லாமலேயே தி.மு.க. நம்பிக்கையுடன் தேர்தலைச் சந்தித்திருக்கலாமே! அவர்களுடன் கூட்டுக்காக ஏங்குவது போன்ற தோற்றம் உருவானதைத் தவிர்த்திருக்கலாமே!"

"கடந்த ஐந்தாண்டு காலத்தில் கண்ணியமிக்க நண்பர்களாக இருந்தவர்களை வரும் தேர்தலிலும் கூட்டணித் தோழர்களாக வைத்துக் கொள்ள விரும்பியதன் வெளிப்பாடுதான் கூட்டணிப் பேச்சுக்கள். சில பகுதிகளில், குறிப்பாக தென் மாவட்டங்களில், தனிப்பட்ட த.மா.கா. பிரமுகர்களுக்குச் செல்வாக்கு உண்டு."

"தென்மாவட்டங்களில் தி.மு.க.வின் செல்வாக்கு எப்படி இருக்கிறது? முக்குலத்தோர் அனைவரும் தி.மு.கவுக்கு எதிராகத்தான் இருக்கிறார்களா?"

"கலைஞர் அரசு செய்த வளர்ச்சிப் பணிகளின் காரணமாக கழக அரசுக்கு நடுநிலை மக்களிடம் பேராதரவு காணப்படுகிறது. நீங்கள் குறிப்பிட்ட சமூகத்தினர் அ.இ.அ.தி.மு.க. ஆதரவாளர்கள் என்பது சரியான மதிப்பீடு அல்ல. எம்.ஜி.ஆர். ஜாதியை நம்பி தேர்தலை சந்திக்கவில்லை. ஆனால் இந்தம்மா தெற்கிலும் வடக்கிலும் இரண்டு பெரிய ஜாதிக்காரர்களின் ஆதரவை நம்பித்தான் தேர்தலில் நிற்கிறார். அந்த அணுகுமுறை தோற்றுப் போகும். அனைத்து ஜாதியினருக்கும், நன்மைகளைச் செய்திருப்பவர் கலைஞர். இந்த நிலையில் ஜாதிக் கட்சிகள் அவசியமேயில்லை. எல்லா ஜாதிக்கட்சிகளும் ஒழிக்கப்படவேண்டும்."

"இருக்கும் சவால்கள் போதாதென்று முதல்வர் மகன் அழகிரியும் கழகத்திற்கு எதிராக தென் மாவட்டங்களில் காய்களை நகர்த்துகிறாரே!"

"இது பற்றிப் பேசுவது நன்றாக இருக்காது. ஆனால் எந்தெந்த இடங்களில் 'அவர்கள்' ஆட்களை நிறுத்துகிறார்களோ அங்கெல்லாம் தி.மு.கவுக்குப் பத்தாயிரம் வோட்டுக்கள் கூடுதலாகக் கிடைக்கும் என்பது மட்டும் நிச்சயம். 'அவர்கள் செயல்களால்' மக்களிடையே தி.மு.கவின் செல்வாக்கு கூடுமே தவிர குறையாது."

"சென்ற முறையே நீங்கள் அறநிலையத் துறை அமைச்சராக நியமிக்கப்படுவீர்கள் என்று மக்கள் எதிர்பார்த்தார்கள்..."

(சிரிக்கிறார்) "பதவி என்பது மக்களுக்குப் பணியாற்றக் கிடைக்கும் ஒரு வாய்ப்புதானே தவிர ஒரு கட்சிக்காரன் அதை எதிர்பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. எம்.ஜி.ஆர். என்னைப் பலமுறை அ.தி.மு.கவுக்கு இழுக்க முயற்சித்ததுண்டு. அரசியலில் இருந்தால் தி.மு.கவில்தான் இருப்பேன். என் பாரம்பரியத்தைக் கட்டிக் காப்பதில் இந்த நிலையும் ஒரு பங்களிப்புதான்.

சந்திப்பு: **ப்ரியன் ஸ்ரீநிவாசன்**

படங்கள்: **ராஜன்**



''தலைவர் எதுக்கு பொதுக்கூட்டத்துக்குப் போகும்போது உலக்கை எடுத்துட்டுப் போறார்?''

''எதிர்க்கட்சியினர் வாதத்தைப் தவிடு பொடி ஆக்கப்போறாராம், அதுக்காகத் தான்!''

– சம்பத் குமாரி

# KALKI SHOPPING PAGE

பருக பருக ஆனந்தம்
அதிக ஆனந்தம்
சுத்தமான தஞ்சாவூர்
டிகிரி காப்பிக்கு

## ஜீவா காபி

**100% பியூர் பில்டர் காபி பவுடர்**

தயாரிப்பாளர்கள் :

**ஜீவா காபி ஒர்க்ஸ்**
28, பி.வி. நாயக்கன் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை – 600 005.

இலவச டோர் டெலிவரிக்கு
தொடர்பு கொள்ளவும் : 8444725

உங்களிடம்
'லிப்கோ'வின்

**108 ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேச வைபவம்**

புத்தகத்தின்
பழைய பதிப்பு
உள்ளதா?



59-ஆம்
பக்கம் பாருங்கள்!



**ADMISSION NOTIFICATION**

## NATIONAL INSTITUTE OF LABOUR EDUCATION & MANAGEMENT (NILEM)

Offers the following **Six Months Diploma Courses** by Correspondence

- TOTAL QUALITY MANAGEMENT & ISO 9000
- BUSINESS MANAGEMENT
- PERSONNEL MGMT. & INDL. RELATIONS
- HUMAN RESOURCES DEVELOPMENT
- ENVIRONMENT & POLLUTION CONTROL
- QUALITY CONTROL & ISO 9000
- ENVIRONMENTAL MGMT. ISO 14000 / 14001
- PRODUCTION MANAGEMENT
- SALES & MARKETING MANAGEMENT
- INTERNATIONAL BUSINESS MANAGEMENT
- QUALITY ASSURANCE & ISO 9000
- LABOUR WELFARE
- BUSINESS ADMINISTRATION
- FINANCIAL MANAGEMENT
- MATERIALS MANAGEMENT
- EXPORT & IMPORT MANAGEMENT
- QUALITY ASSURANCE & QS 9000
- INDUSTRIAL SAFETY
- LABOUR LAWS
- OFFICE ADMINISTRATION
- CONTRACTS MANAGEMENT
- FIRE & SAFETY MANAGEMENT
- INDUSTRIAL LAW
- MANAGEMENT DEVELOPMENT

No formal qualification is required for joining the courses. Each diploma has 4 written papers. Tuition Fee Rs. 800/- (Including Study Materials & Model Question Papers). Examination will be conducted in all major centres in India. For detailed Prospectus & Application Form send Rs. 30/- by D.D./M.O./I.P.O. in favour of **NATIONAL INSTITUTE OF LABOUR EDUCATION & MANAGEMENT** and apply to **NILEM**, No. 59, Second Street, Parameswari Nagar, Adyar, Chennai - 600 020. Phone : 044 - 4911443 E-mail : nilem_india@hotmail.com

"இன்னிக்கு ரெண்டுல ஒண்ணு தெரிஞ்சாகணும்... இருபத்தியொரு வருஷம் சர்வீஸ் போட்டு 'நல்லாசிரியர் விருது' வாங்கின நான் ராஜினாமா பண்றதா, இல்லை இந்த அறிவுமதியை ஸ்கூலை விட்டு சஸ்பெண்ட் பண்றதா?... இந்தக் கையாலாகாத பிரின்ஸிபல் ஒண்ணும் பண்ணாம உட்கார்ந்துக்கிட்டிருந்தா, நான் ஏ.சி. என்ன, டெல்லில டி.சி. வரைக்கும் கூடப் போய்ப் பார்த்துட்டு வந்துடறேன்... என் சொந்தக் காசை செலவழிச்சுகூட போவேன். ஆனா, இந்தப் பய இனி ஒரு நாள் கூட இந்த ஸ்கூல் பக்கம் வரக் கூடாது"- கணக்கு வாத்தியார் வெங்கடேசமூர்த்தி போட்ட கூச்சலில் வகுப்பென்ன, பள்ளிக்கூடமே ஒரு நிமிடம் ஆடிப் போனது.



திட்டமிட்ட பாடங்களை முடிக்க இன்னும் இருபது நாட்களே இருக்கின்றன என்ற நிர்ப்பந்தத்தில் என்னுடைய வகுப்பில் சீரியஸாக கேள்வி பதில்களை டிக்டேட் செய்து கொண்டிருந்த எனக்குக் கையும் ஓடவில்லை; காலும் ஓடவில்லை. வெளியே எட்டிப் பார்த்தபோது, என்னைப் போலவே மற்ற வகுப்புகளிலிருந்தும் டீச்சர்கள் தலையை வெளியே நீட்டி, 'இன்றைக்கு அறிவுமதி கதை அவ்வளவுதான்' என்பது போல ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

என்ன நடந்திருக்கும் இவர் இவ்வளவு கோபம் அடைவதற்கு என்று மண்டையைக் குடைந்து கொண்டே மீண்டும் என்னுடைய வகுப்பைத் தொடர்ந்தேன். இங்குமங்கும் நெளிந்து கொண்டும், சிரித்துக் கொண்டும், குசுகுசுத்துக் கொண்டும் நான் சொல்வதை அரையும் குறையுமாக மாணவர்கள் எழுதிக் கொண்டிருந்தார்கள்.

மத்தியான சாப்பாட்டு மணி அடித்ததும் ஸ்டாஃப் ரூம் பக்கம் போனால், அறை முழுவதும் அறிவுமதியைப் பற்றிய அலசல்தான்.

என்ன நடந்தது என்று விசாரித்தேன். நடந்தது இதுதான்: ஒரு மணி நேரம் ஈக்குவேஷனை எப்படி பாலன்ஸ் பண்ணுவது என்பதை விளக்கிவிட்டு, ஒரு சிம்பிளான கணக்கு கொடுத்தாராம். கிளாஸ் முடிவில் எல்லோரும் நோட்டுப்

# திருப்புமுனை (அல்லது) அனுப்பு வெளியே!

ஜி.பி. சதுர்புஜன்

புத்தகங்களை மேஜை மீது அடுக்கி வைத்தபின், அறிவு மதியுடைய நோட்புக்கை வாங்கிப் பார்த்தால், ஈக்குவேஷனைப் பாலன்ஸ் செய்வதற்குப் பதிலாக, ஏதேதோ கெட்டவார்த்தைகளையெல்லாம் எழுதி, 'திஸ் ஈஸ் ஈக்குவல் டு தட்'ன்னு எழுதியிருந்தானாம். என்னடா எழுதியிருக்கேன்னு கேட்டதற்கு 'இந்த ஈக்குவேஷனும் கரெக்ட்தான் சார்'னு திமிரா பதில் சொல்லியிருக்கான்... வகுப்பே விழுந்து விழுந்து சிரிச்சிருக்கு...

வி.எஸ். வெங்கடேசமூர்த்தின்னா வெரி ஸ்டிரிக்ட் வெங்கடேசமூர்த்தின்னு பெயர் எடுத்திருந்தவருக்கு எப்படி இருந்திருக்கும்?

''இவனுக்கு அவங்க வீட்டுல போயும் போயும் அறிவுமதின்னு பேரு வச்சிருக்காங்க பாருங்க... அறிவும் கிடையாது, மதியும் கிடையாது. அறிவிலின்னு பேர் வெச்சிருக்கணும்''– தமிழ் வாத்தியார் எண்ணெயைத் தாராளமாக ஊற்றினார்.

''அவன் பரம்பரையிலேயே யாருக்கும் அறிவு இல்லை போலிருக்கு. அதனால்தான் இவனுக்காவது இருக்கட்டுமேன்னு பேர் வெச்சிருப்பாங்க... அதென்னவோ, இவனும் தப்பாம பொறந்திருக்கான்''– சமஸ்கிருத வாத்தியார் வெறுப்புடன் இந்த நாமகரணத்துக்கு வித்தியாசமான விளக்கம் கொடுத்தார்.

''அவன் பண்ணாத சேட்டை இல்லை.... ஏதோ, பசங்கன்னா இப்படி அப்படி இருப்பாங்கதான்... ஆனா இப்பிடியா? இன்னிக்கு இவனை ஒழிச்சாத்தான் சரியா வரும்...''– தீர்மானத்தை இன்னும் கடுமையாக்கிக் கொண்டிருந்தார் வெங்கடேசமூர்த்தி.

அவர் இப்படி உறுமிக் கொண்டிருக்கும்போதே, அவர் சொல்வது சரிதான் என்பதுபோல் ஆசிரியர்கள் அனைவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

ஸ்டாஃப் ரூமே கூடி ஒருமனதாகத் தீர்ப்பு வழங்கியது போலிருந்தது.

''அவன் ப்ரீகேஜி எல்கேஜியிலிருந்தே ப்ராப்ளம் சைல்ட்தான். பக்கத்துல இருக்கற பசங்களை அடிக்கறது, கிள்றது, அழவுடறதுன்னு தினம் ஒரு புகார். பேரன்ட்ஸ் எல்லாம் திரும்பத் திரும்ப வந்து, 'மிஸ், ஏன் இந்த மாதிரி பசங்களை எல்லாம் ஸ்கூல்ல வச்சுக்கிட்டு இருக்கீங்க?'என்று கேட்காத நாளேயில்லை...'' இது பிரைமரி செக்ஷனில் மிகவும் சீனியரான மங்களேஸ்வரி மேடம்.

–''நீங்க அப்பவே வெளியில அனுப்பிச்சிருக்கணும். நீங்க 'பாவம், பாவம்'னு பார்த்துக்கிட்டு இருந்ததால்தான் இப்ப அவன் இன்னும் இங்க உட்கார்ந்துக்கிட்டு அக்கிரமம் பண்ணிக்கிட்டிருக்கான்''– வெங்கடேசமூர்த்தி விளாசினார்.

– ''சார்... உங்க கோபத்தை எங்கிட்ட ஏன் காட்டுறீங்க? நான் பழைய கதையை

சொன்னேன்- அவ்வளவுதான். நான் என்ன பிரின்சிபலா வெளியில அனுப்ப...? எனக்கு என்ன, அதிகாரம் இருக்கு? எல்லாம் எடுத்துச் சொல்லி, பேரன்ட்ஸ்லோட கம்ப்ளெயிண்ட்ஸ் எல்லாம் ஆதாரமா காட்டியும், பிரின்சிபல் அவனை வார்ன் பண்ணி விட்டுட்டார். நான் என்ன பண்றது சொல்லுங்க?''

மங்களேஸ்வரி மேடம் சொன்னதென்னவோ முழுக்க முழுக்க சரியாகப்பட்டது எனக்கு. அறிவுமதியை வெறுக்காத டீச்சரே ஸ்கூலில் இல்லை என்று கூட சொல்லலாம். அவனைத் திருத்த முயற்சி செய்தவர்கள் கூட கடைசியில் தோல்வியை ஒப்புக் கொண்டுப் போட்டியை விட்டு விலகி விட்டவர்கள்தான். இன்னும் சொல்லப் போனால், ரிடையர் ஆன பழைய டீச்சர்களைப் பார்க்கும் போது கூட, 'என்ன இன்னும் அறிவுமதி அப்படியேதான் இருக்கானா?' என்று விசாரிக்க மறப்பதே இல்லை.

வெங்கடேச மூர்த்தி பிரின்சிபல் ரூமுக்குள் அதிரடியாக நுழைந்தபோது, இன்றைக்கு பூகம்பமே வெடிக்கப் போகிறது என்று எதிர்பார்த்தோம்.

தூரத்திலிருந்து, பிரின்சிபல் முன்னால் நின்று கொண்டு அவர் கையைக் கையை ஆட்டுவதும், கோபத்தில் பொருமுவதும் டீவியில் ஓடும் சப்தமில்லாமலே புரியும் ஆக்ஷன் படம் போல் தெரிந்தது.

கொஞ்ச நேரத்திலேயே வெற்றிக் களிப்போடு வெளியே வந்தார். கூடவே, பியூன் வந்து, ஸ்டாஃப் ரூமில் எல்லோரையும் ப்ரின்சிபல் சந்திக்க விரும்புவதாகச் சொன்னவுடன் 'அப்பாடி, அறிவுமதி தீர்ந்தான்' என்று எல்லோரும் பெருமூச்செறிந்தார்கள்.

பிரின்சிபல் நுழைந்தார். காதைத் தீட்டிக் கொண்டோம்.

''மூர்த்தி சார், நடந்ததையெல்லாம் சொன்னார். கேட்கவே கஷ்டமாயிருந்தது...

''ஆனா, உங்களுக்கெல்லாம் பிடிக்காத விஷயத்தைதான் திரும்பவும் இன்னிக்குச் சொல்லப் போறேன். நீங்கள் எல்லாம் விரும்புவது போல, அறிவுமதியை நான் சஸ்பெண்ட் பண்றதா இல்லை...

''அறிவுமதியோட அம்மா அப்பா கூட அவனைத் தண்ணி தெளிச்சு விட்டுட்டாங்க. ஆனா, அறிவு, மதி- இந்த விஷயங்களைக் காப்பாத்த வேண்டியதே பள்ளிகள் தான்னு திடமா நம்பறவன் நான்... அப்படி

என்னுடைய பழைய ஆசிரியர்களும், தலைமை ஆசிரியரும் நம்பினதாலதான், இன்னிக்கு இந்தப் பள்ளிக்குப் பிரின்ஸிபலா ஒரு நல்ல வாழ்க்கையை வாழ்ந்துக்கிட்டிருக்கேன். ஏன்னா, பள்ளி நாட்களில் நானும் ஓர் அறிவுமதியாத்தான் இருந்தேன்... சொல்லப்போனா இன்னும் மோசமா இருந்தேன். நானே இந்த நிலைமையில் உட்கார்ந்திருக்கேன்னா, அவனால முடியாதா? அவங்க வாத்தியார்களால நல்வழிபடுத்த முடியாதா?

அறிவுமதியைப் போன்றவர்களுடைய கடைசி நம்பிக்கையே பள்ளிகள்தான். அவனை மறுபடி மன்னிக்கணும்னு உங்களை வேண்டிக் கேட்டுக்கறேன். அவனை உங்க சொந்த மகனா நினைச்சுக்குங்க... ப்ளீஸ்..."

கைகளைக் குவித்து, கும்பிட்டவாறே கண் கலங்கினார் பிரின்ஸிபல்...

கண்டிப்புக்குப் பெயர்போன அவரா இப்படி குழந்தையாகக் கரைகிறார்?

வி.எஸ். மூர்த்தியைப் பார்த்தேன். அந்தக் கல்லும் கரைந்திருந்தது. ○

## கல்லெல்லாம் மாணிக்கம்!

ஹாங்காங் 'பேன்ஸி ஜெம்ஸ்' நிறுவனம் சமீபத்தில் மாணிக்கக் கற்கள் கண்காட்சியை திருச்சியில் நடத்தியது.

"சென்ற ஆண்டு சென்னை பிரசிடென்ஸி ஹோட்டலில் இந்தக் கண்காட்சியினை நடத்தினோம். பயன் இல்லை. காரணம், நவமணிக் கற்களைக் கொண்டு வருபவர்கள் கிராமத்து ஆட்கள். 'ஈஸ்ட்'மென் கலர்த்துண்டு, மடித்துக் கட்டிய வேட்டி, கையில் மஞ்சள் கலர்த்துணிப் பை சகிதமாக (மணிக்கற்களுடன்!) படையெடுத்து வந்த கிராமப்புற மனிதர்களை பிரசிடென்ஸி ஹோட்டல் வாசலில் அதன் காவலர்கள் தடுத்து அனுப்பி விட்டார்கள்! இந்தமுறை திருச்சியில் அந்த இடைவெளி மறைந்து விட்டது.



• அ. அய்யூப்

தமிழ்நாட்டில் காங்கேயம், கரூர், குளித்தலை, நாமக்கல், தாராபுரம் பகுதிகளில் பச்சை, நீலம், சிவப்புக் கற்கள் அதிகமாய்க் கிடைக்கின்றன. தமிழகத்தில் கிடைப்பவை உலகில் மிகச்சிறந்த மாணிக்கங்கள். இப்பொழுதும் காங்கேயம், கரூர், உப்பிடமங்கலம், வெள்ளியணை போன்ற இடங்களில் நடைபெறும் வாரச் சந்தைகளில் இவை விற்கப்படுகின்றன. வெளிநாடுகளிலிருந்தும், ஜெய்ப்பூரிலிருந்தும் வியாபாரிகள் வந்து நவமணிகளை வாங்கிச் செல்கிறார்கள்.



• கண்காட்சியில்...

நாமக்கல் அருகே செவிட்டுரங்கன்பட்டி, குளித்தலையிலிருந்து 25கி.மீ. தொலைவில் உள்ள கீரனூர் ஆகிய கிராமங்களிலிருந்து நூறு ஆண்டுகளுக்கு முன்னர் வெள்ளைக்காரர்கள் மாணிக்கக் கற்களை மூட்டை கட்டி, கழுதைகள் மீதேற்றிச் சென்றதாகச் செவி வழிச் செய்தி அந்தப் பகுதிகளில் நிலவி வருகின்றது.

கரூர்–திண்டுக்கல் ரயில் பாதை அமைக்க பூமியைத் தோண்டிய போது சிலருக்கு மாணிக்கக் கற்கள் கிடைத்தன. அங்கு கிடைத்த ஒரு சிவப்புக் கல் மட்டும் மூன்று லட்ச ரூபாய்க்கு விலைபோனது. இப்பகுதியில் தோட்டம், வயல்களில் கிணறு வெட்டும்போது மாணிக்கக் கற்கள் கிடைக்கின்றன. இதற்காகவே கிணறு வெட்டுகிறவர்களும் உண்டு!" என்றார் 'பேன்ஸி ஜெம்ஸ்' நிறுவன உரிமையாளர் அ. அய்யூப்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# பொன்னியின் செல்வன்

அறுபத்து ஆறாம் அத்தியாயம்

## மதுராந்தகன் மறைவு

குதிரையும் தானுமாகத் திடீரென்று உருண்டு விழுந்தும் சிறிதும் மனங்கலங்காத கந்தமாறன், எழுந்திருக்கும்போதே கையில் வேலை எடுத்துக் கொண்டு எழுந்தான். அவனுடைய நோக்கம் ஏற்கெனவே மறுகரையை அணுகிக்கொண்டிருந்த குதிரையின் பேரில் சென்றுவிட்டது. அக் குதிரை மேல் ஏறிக்கொண்டிருந்தவன் சந்தேகமின்றி வந்தியத்தேவன் என்று அவன் நிச்சயித்துக் கொண்டான்.

வந்தியத்தேவன் பேரில் கந்தமாறன் கொண்டிருந்த பழைய சிநேகம் இப்போது கடும் பகையாக மாறியிருந்தது. பலவிதத்திலும் வந்தியத்தேவன் சிநேகத் துரோகம் செய்துவிட்டதாக அவன் எண்ணினான். தனக்கும் தன் குடும்பத்துக்கும் நேர்ந்த அபகீர்த்திக்கெல்லாம் காரணம் வந்தியத்தேவன் தான்! தன் வீட்டில் வந்து தங்கியிருந்த போது தெரிந்து கொண்ட இரகசியத்தைப் பலரிடத்திலும் சொல்லியிருக்கிறான்; இராஜ குடும்பத்தாரிடமும் கூறியிருக்கிறான். எதற்காக? சோழ குலத்தினிடம் கொண்ட பக்தி விசுவாசம் காரணமாகவா? இல்லவே இல்லை! இந்த இரகிசயத்தைச் சொல்லி அவர்களுடைய நம்பிக்கையைச் சம்பாதித்துக்கொண்டு, பிறகு அவர்களுக்கும் துரோகம் செய்வதற்காகத்

அமரர் கல்கி

தான்! பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளுக்கு அவன் உதவி செய்திருக்கிறான் என்பதில் சந்தேகமில்லை. இந்த இரட்டைத் துரோகத்தை நந்தினியின் தூண்டுதலினால் அவன் செய்தானா, வேறு தன் சொந்த லாபங் கருதியே செய்தானா என்பது தெரியவில்லை. நந்தினியின் மாயவலையில் தானும் சில காலம் சிக்கியிருந்தது உண்மையேதான்! ஆனாலும் இம்மாதிரி பயங்கர பயங்கரத் துரோகச் செயல்களைக் கனவிலேனும்தான் செய்ய எண்ணியிருக்க முடியுமா?

இவற்றையெல்லாம் விடத் தனது அருமைச் சகோதரி மணிமேகலையின் மனத்தைக் கெடுத்து விட்டதன் பொருட்டு கந்தமாறனுக்கு வந்தியத்தேவன் மீது அளவில்லாத கோபம் பொங்கிக்கொண்டிருந்தது. மணிமேகலையைச் சாம்ராஜ்ய சிங்காதனத்தில் மணிமகுடம் தரித்துச் சக்கரவர்த்தினியாக வீற்றிருக்கச் செய்ய வேண்டுமென்று கந்தமாறன் ஆசை கொண்டிருக்க, அந்தக் கள்ளங்கபடமற்ற பெண்ணைக் 'கரிகாலரை நான்தான் கொன்றேன்' என்று பலரறியப் பிதற்றும்படி செய்த கொடிய வஞ்சகன் அல்லவா அவன்?

அவ்வளவு பெரிய பாதகங்களைச் செய்தவன் உயிர் தப்பி ஓடும்படி விட்டு விடுவதா? அதைத்தான் பார்த்துக் கொண்டிருப்பதா? ஒருநாளும் இல்லை!



...ந்தியத்தேவனை உயிரோடு பிடித்துக் கொண்டு போக முடியுமானால் நல்லதுதான்! முடியாத வரையில், அவனைக் கொன்று தொலைத்து விட்டோம் என்று ஆறுதலுடனாவது இங்கிருந்து திரும்பிப் போக வேண்டும்... இந்தத் தீர்மானத்துடனேதான் கந்த மாறன் அந்த மனித வேட்டைக்குப் புறப்பட்டான்.

இப்போது அவனுடைய குதிரை எதிர்பாராத விதமாகத் தடுக்கி விழுந்துவிட்டது. அது இனி பிழைப்பதே துர்லபம். வைத்தியர்மகன் பினாக பாணியின் குதிரைக்கும் அதே கதி தான்!

வந்தியத்தேவனோ நதியின் அக்கரையை நெருங்கிவிட்டான்!

பின்னால் வந்த வீரர்கள் அங்கு வந்து சேர இன்னும் சிறிது நேரம் பிடிக்கும். அவர்கள் வந்துவிட்டாலும் வெள்ளத்தைக் கடந்து அக்கரை சென்று வந்தியத்தேவனைப் பிடிப்பது இயலாத காரியம். ஆகையால் அவனைக் கொன்றுவிடுவது ஒன்றே செய்யத் தக்கது...

இவ்வளவு எண்ணங்களும் கந்த மாறனுடைய உள்ளத்தில் சில கண நேரத்தில் தோன்றி மறைந்தன. எனவே, தரையிலிருந்து எழுந்து நின்றதும், கால்களை நன்றாக ஊன்றிக்கொண்டு, கையிலிருந்த வேலை உயர்த்திக் குறி பார்த்துப் பலங் கொண்ட மட்டும் வீசி



எறிந்தான்.

வேல் 'விர்' என்ற சத்தத்துடன் சென்று கண்மூடித் திறக்கும் நேரத்தில் மதுராந்தகன் பேரில் பாய்ந்தது.

'வீல்' என்று சத்தமிட்டு விட்டு மதுராந்தகன் தண்ணீரில் விழுந்தான்.

குதிரை மட்டும் தட்டுத் தடுமாறிக் கரை மேல் ஏற முயன்றது.

மிகச் சொற்ப நேரத்துக்குள் நடந்துவிட்ட மேற்கூறிய நிகழ்ச்சிகளையெல்லாம் மரக்கிளையிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த கருத்திருமன், உள்ளம் பதறி உடலும் நடுங்கினான்.

இப்படியெல்லாம் நடக்கக்கூடும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை.

வேகமாக வந்து திடீரென்று தடுக்கி விழுந்த குதிரைகளுக்கு அடியில் அகப்பட்டுக்கொண்டவர்கள் உயிரோடு தப்பி எழுந்தாலும் கைகால் ஒடிந்தவர்களாக எழுந்திருப்பார்கள் என்று அவன் எண்ணியிருந்தான்.

அவன் சற்றும் எதிர்பாராதபடி எல்லாம் நடந்துவிட்டது. கீழே விழுந்தவர்களில் ஒருவன் எழுந்து நின்று வேல் எறிந்து, அதுவும் மதுராந்தகன் பேரில் குறி தவறாமல் சென்று பாய்ந்து அவனை வெள்ளத்தில் வீழ்த்திவிட்டது. இதனால் ஏற்பட்ட முதல் அதிர்ச்சியைச் சமாளித்துக்கொண்டு, பயங்கரமான கூக்குரலுடன் கீழே பாய்ந்தான்.

ஆத்திர வெறியினால் ஏற்பட்ட ராட்சத பலத்துடன் கந்தமாறனைத் தாக்கி கீழே தள்ளிவிட்டு அப்பால் சென்றபோது, அப்போதுதான் தட்டுத் தடுமாறி எழுந்து கொண்டிருந்த வைத்தியர் மகன் அவனைத் தடுக்கப் பார்த்தான். பினாகபாணிக்கு இதற்குள் பிசாசு பயம் நீங்கி, மரத்தின் மேலிருந்தவன் கருத்திருமன் என்பது தெரிந்து போயிருந்தது.

கருத்திருமன் உள்ளத்தில் பொங்கிய கோபத்தையெல்லாம் செலுத்திக் கையிலிருந்த சிறிய கத்தியால் பினாகபாணியைக் குத்திக் கீழே தள்ளிவிட்டுப் பாலத்தை நோக்கி ஓடினான்.

அங்கில் மரப் பாலத்தின் மீது ஒரு மனிதன் ஓடுவதைக் கந்தமாறனுக்கும் பினாகபாணிக்கும் பின்னால் குதிரைகள் மீது வந்த வீரர்கள் பார்த்தார்கள்.

தாங்கள் வருவதற்கு முன் நிகழ்ந்தவற்றை ஒருவாறு அவர்கள் ஊகித்துத் தெரிந்துகொண்டு குதிரைகளை அங்கே நிறுத்தினார்கள்.

கந்தமாறன், "பிடியுங்கள்! பிடியுங்கள்! பாலத்தின் மேல் ஓடுகிறவனைப் பிடியுங்கள்!" என்று கூவினான்.

நாலு பேரும் குதிரை மேலிருந்து தடதடவென்று குதித்துப் பாலத்தின் மீது முன்னால் சென்ற கருத்திருமனைத் தொடர்ந்து ஓடினார்கள்.

திடீரென்று இரண்டாவது முறையும் தள்ளப்பட்டுத் தலை குப்புற விழுந்த அதிர்ச்சியினால் சிறிது நேரம் செயலற்றுக் கிடந்த கந்தமாறன் விரைவிலேயே மறுபடியும் சமாளித்துக் கொண்டு எழுந்து அந்த நாலு வீரர்களுக்குப் பின்னால் தானும் ஓடினான்.

கத்தியினால் குத்தப்பட்டுப் படுகாயமுற்றிருந்த வைத்தியர் மகனும் ஆவேசங்கொண்டு எழுந்து அவர்களைப் பின்தொடர்ந்து பாலத்தின் மீது சென்றான்.

ஆனால் ஐந்தாறு அடி எடுத்து வைப்பதற்குள் அவனுடைய ஜீவசக்தி குன்றிவிட்டது. கண்கள் இருண்டு வந்தன. தலை சுற்றியது. காலை ஊன்றி நிற்கப் பார்த்தும் முடியாமல் தள்ளாடி நதி வெள்ளத்தில் விழுந்தான்.

அவன் அவ்வாறு விழுந்ததை

முன்னால் சென்றவர்கள் யாரும் கவனிக்கவில்லை.

பாவம், எத்தனை எத்தனையோ மனோராஜ்யங்கள் செய்துகொண்டிருந்த வைத்தியர் மகன் பினாகபாணி தன்னுடைய துராசைகளில் எதுவும் நிறைவேறப் பெறாதவனாக உயிர் நீத்தான்! அவன் கட்டிய ஆகாசக் கோட்டைகள் எல்லாம் வடவாற்று வெள்ளத்தில் மூழ்கி மறைந்தன! அவனுடைய உடலுக்கும் அந்த நதியில் ஓடிய பெரும் பிரவாகமே சமாதிக் குழி ஆயிற்று!

கந்தமாறனைத் தாக்கித் தள்ளிவிட்டு, வைத்தியர் மகனைக் கத்தியால் குத்திவிட்டு மூங்கில் பாலத்தின் மீது விரைந்து ஓடிய கருத்திருமன், அந்தப் பாலத்தில் முக்கால் பங்கு தூரம் கடந்ததும் ஒரு கணம் நின்று திரும்பிப் பார்த்தான். அப்போதுதான் குதிரைகள் மீது வந்த ஆட்கள் கீழே குதித்துப் பாலத்தின் முனையை அடைந்திருப்பதைக் கவனித்தான்.

உடனே அவன் ஒரு விந்தையான காரியம் செய்தான். அவன் நின்ற இடத்தில் மூங்கில் கழிகளை ஒன்றோடொன்று சேர்த்துக் கட்டியிருந்ததுடன், கீழேயும் முட்டுக் கொடுத்து நிறுத்தியிருந்தது. பினாகபாணியைக் குத்திய அதே கத்தியினால் அந்தக் கட்டுக்களை சடசடவென்று அறுத்துவிட்டான். கீழே முட்டுக் கொடுத்திருந்த கழிகளையும் காலினால் உதைத்துத் தள்ளி விட்டு மேலே விரைந்து ஓடினான்.

அக்கரையை அடைந்ததும், அங்கேயும் மூங்கில் கழிகளை மரத்து வேருடன் சேர்த்துக் கட்டியிருந்த கயிறுகளை அறுத்தான். உடனே பாலத்தின் முனையை அப்படியே கை கொடுத்து நெம்பித் தூக்கி அப்புறப் படுத்தி நதியின் வெள்ளத்தோடு விட்டான்.

மறுகணம் அந்த மூங்கிற் கழிப் பாலத்தில் ஏறக்குறைய மூன்றில் ஒருபகுதி தனியாகப் பிய்த்துக்கொண்டு புறப்பட்டு ஆற்று வெள்ளத்தோடு மிதந்து செல்லத் தொடங்கியது.

பாலத்தின் மேலே ஓடி வந்தவர்கள், அவ்விதம் அங்கே பாலம் பிய்த்துக் கொண்டு போனதைக் கவனியாமல் மேலே மேலே ஓடி வந்து ஒவ்வொருவராக வெள்ளத்தில் விழுந்தார்கள்!

அவர்கள் எல்லாருக்கும் கடைசியாக வந்த கந்தமாறன் மட்டுமே அவ்வாறு ஆற்றில் விழாமல் தப்பினான்.

எதிர்பாராமல் வெள்ளத்தில் விழுந்தவர்கள் தண்ணீரைக் குடித்துத் திணறித் திண்டாடிய பிறகு, வெளியில் தலையை நீட்டினார்கள்.

கந்தமாறன் அவர்களைப் பார்த்து அக்கரைக்கு நீந்திச் சென்று கரையேறும்படி சத்தம் போட்டுக் கட்டளையிட்டான். அவர்களில் இரண்டு பேர் அதைத் தெரிந்துகொண்டு அக்கரையை நோக்கி நீந்திச் சென்றார்கள்.

மற்ற இருவர் மிக மிகப் பிரயாசைப் பட்டு எதிர்நீச்சல் நீந்தி வந்து எஞ்சி நின்ற பாலத்தைப் பிடித்துக்கொண்டு அதன் மேல் ஏறினார்கள்.

அவர்களை முதலில் கந்தமாறன் நன்றாகத் திட்டினான். ஆனால் அவர்களை மறுபடியும் நீந்திப் போகச் சொல்வதில் பயனில்லை என்று உணர்ந்தான்.

எனவே, பாலத்திலிருந்து இன்னும் சில மூங்கில் கழிகளைப் பிடுங்கித் தெப்பத்தைப் போல் கட்டும்படி செய்தான். அதை வெள்ளத்தில் மிதக்க விட்டுக் கந்தமாறனும் மற்ற இருவரும் அதைப் பிடித்துக்கொண்டு மிதந்து அக்கரையை அடைந்தார்கள்.

அதற்குச் சற்று முன்னால் தட்டுத் தடுமாறி அக்கரை சேர்ந்திருந்த மற்ற இரு வீரர்களையும் சந்தித்தார்கள்.



அவர்கள் தாங்கள் கரையேறுவதற்குச் சற்று முன்பே அக்கரை சேர்ந்த மனிதன் இருளில் மறைந்து விட்டதாகவும், இரண்டு குதிரைகள் போகும் காலடிச் சத்தம் கேட்டதாகவும் சொன்னார்கள். குதிரைகளைத் தொடர்ந்து கால்நடையாகப் போவதில் பயனில்லையென்று தாங்கள் நின்று விட்டதாகவும் அவர்கள் கூறினார்கள்.

ஆனால் கந்தமாறன் அவ்விதம் நின்று விடுவதற்கு விரும்பவில்லை. வைத்தியர் மகன் கூறிய சிறையிலிருந்த பைத்தியக்காரன்தான் மரத்திலிருந்து குதித்துத் தன்னை தள்ளி விட்டுப் பாலத்தின் மேல் ஓடியவனாக இருக்க வேண்டும். வந்தியத்தேவனைத் தப்புவிப்பதற்காகவே

அவன் அவ்விதம் சாலைக்குக் குறுக்கே கயிற்றைக் கட்டி விட்டு மரத்தின் மேல் ஏறிக் காத்திருந்திருக்க வேண்டும். தன்னுடைய வேலுக்கு இரையானவன் வந்தியத்தேவன்தான் என்பதில் ஐயமில்லை. அவன் குதிரை மேலிருந்து வெள்ளத்தில் தலைகுப்புற விழுந்ததை அவன் கண்களாலேயே பார்த்தாகிவிட்டது. ஆயினும் உயிர் பிரிந்த அவனுடைய உடலைக் கண்டுபிடித்துப் பார்த்து விட்டால், அவன் உள்ளம் மேலும் திருப்தி அடையும். ஒருவேளை தஞ்சாவூருக்கே வந்தியத்தேவன் உடலை எடுத்துக்கொண்டு போனாலும் போகலாம். சோழ குலத்துக்கு மாபெரும் துரோகம் செய்த ஒருவனைக் கொன்று கொண்டு வந்த பெருமையை அடையலாம் அல்லவா? அதன் மூலம் சம்பு வரையர் குலத்துக்கு நேர்ந்த அபகீர்த்தியையும் ஓரளவு போக்கிக் கொள்ளலாம். வந்தியத்தேவன் தப்பி ஓடிப் போக முயன்றது ஒன்றே அவன் குற்றத்தை நிரூபிக்கப் போதுமான காரணம் ஆகும். ஆதித்த கரிகாலரைக் கொன்றவன் வந்தியத்தேவன் என்பது நிச்சயமாகி விட்டால், அந்தப் பயங்கரமான பழியைச் சம்புவரையர் குலம் சுமக்க வேண்டியிராதல்லவா?

இவ்வாறு யோசனை செய்து கொண்டு கந்தமாறன் வடவாற்றங் கரையோடு கீழ் நோக்கிச் சென்றான். வீரர் நால்வரும் அவனைப் பின்பற்றிச் சென்றார்கள். வந்தியத்தேவனுடைய உடல் எங்கேயாவது கரையில் ஒதுங்கிக் கிடக்கிறதா என்று பார்த்துக்கொண்டே சென்றார்கள். இருளடர்ந்த இரவு நேரத்தில் இந்தக் காரியம் அவ்வளவு சுலபமாக இல்லைதான். ஆயினும் கந்தமாறன் நம்பிக்கையைக் கைவிடாமல் மேலே மேலே போனான். இவ்வாறு வெகுதூரம் போன பிறகு பெரியதோர் அருவி மலையிலிருந்து விழுவது போன்ற ஓசை கேட்கலாயிற்று. அந்த ஓசை எழுந்த இடத்தை நெருங்கிச் சென்று பார்த்தபோது, அங்கே நதியின் குறுக்கே ஒரு கலங்கல் கட்டியிருந்தது தெரியவந்தது. அவ்விடத்தில் தண்ணீர் தேங்கி நின்று, அடுத்தாற்போல் பள்ளத்தில் அதிவேகமாக விழுந்து சுற்றிச் சுழன்று அலைமோதிக் கொண்டு சென்றது.

வந்தியத்தேவனுடைய உடல் அது வரையில் வந்திருக்குமானால் அந்தப் பெரும் பள்ளத்தில் விழுந்து அமிழ்ந்து போயிருக்கும். மறுபடியும் வெளியில் வருவதற்குப் பல நாட்கள் ஆகும். ஒரு வேளை வெளிப்படாமலே மறைந்து போனாலும் போய் விடலாம். ஆகையால் இனிமேலும் தேடிக்கொண்டு போவதில் பயனில்லை...

இவ்வாறு கந்தமாறன் எண்ணிக் கொண்டிருந்தபோதே, நதிக் கலங்கலைத் தாண்டிக் கொண்டு வெண்ணிற நுரைமயமாகப் பொழிந்து கொண்டிருந்த நீரோட்டத்தோடு ஏதோ ஒரு கரிய பொருள் விழுவது தெரிந்தது. ஆகா! அதுதான் வந்தியத்தேவனுடைய உடலாக இருக்க வேண்டும்!- இந்த மண்ணுலகை விட்டு ஒரு பெரிய துரோகி ஒழிந்துபோனான்! அவனுடைய பாவங்களை ஆண்டவன் மன்னிப்பாராக! -ஆனால் அது இயலுகிற காரியமா? அவனுடைய பாவங்களை ஆண்டவனால் கூட மன்னிக்க முடியுமா? முடியாது! முடியாது! அவற்றின் பலன்களை அவன் மறு பிறவியில் அநுபவித்தேயாக வேண்டும் அல்லவா?

எப்படியாவது போகட்டும். இவ்வுலகத்தில் வந்தியத்தேவனுடைய வாழ்க்கை முடிந்துவிட்டது. இனி அவனைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. தஞ்சைக்குத் திரும்பிப் போய் மற்றக் காரியங்களைக் கவனிக்கலாம்.

இவ்வாறு கந்தமாறன் முடிவு செய்து கொண்டு வந்த வழியே திரும்பினான்... ஆகா! தஞ்சையிலேதான் அவனுக்கு எவ்வளவு பெரிய ஏமாற்றம் காத்திருந்தது? தான் வேல் எறிந்து கொன்று நதி

வெள்ளத்தில் விழச் செய்தவன் வந்
தியத்தேவன் அல்ல, - இளவரசன் மது
ராந்தகன் என்று அறியும்போது கந்த
மாறன் எப்படித் திடுக்கிடுவான்?
அவன் காலின் கீழ் பூமி பிளந்து விட்ட
தாகவே தோன்றினாலும் சிறிதும்
வியப்படைவதற்கில்லையல்லவா?



# அறுபத்து ஏழாம் அத்தியாயம்

## "மண்ணரசு நான் வேண்டேன்"



பழுவேட்டரையர்கள் முதலான குறுநில மன்னர்களின் ஊர்வலம் அப்பால் சென்றதும் ஆழ்வார்க்கடியான் தன் ஆட்களுடனே சேந்தன் அமுதனுடைய பூந்தோட்டத்தை நோக்கி நடந்தான். பூந்தோட்டத்துக்குச் சமீபத்தில் ஒரு மரத்தடியில் சற்று மறைவாக மதுராந்தகத் தேவரின் சிவிகையும் அதைத் தூக்கும் ஆட்களும் நின்றார்கள். அவர்களிடம் விசாரித்து இளவரசர் கட்டளைப்படி அவர் திரும்பி வருகைக்காக அவர்கள் காத்துக் கொண்டிருந்ததை அறிந்துகொண்டான். பின்னர் மேலே சென்று பூந்தோட்டத்துக்குள் புகுந்தான். தன்னுடன் வந்தவர்களிடம் மெல்லிய குரலில் அத்தோட்டமெல்லாம் சுற்றித் தேடிப் பார்க்கும்படி கூறிவிட்டுத் தான் மட்டும் குடிசை வாசலில் போய் நின்று கொண்டான். உட்புறம் தாளிட்டிருந்த கதவண்டை காதை வைத்து ஒட்டுக் கேட்கலானான். சேந்தன் அமுதனும் பூங்குழலியும் கவலையுடன் பேசிக் கொள்ளும் குரல்கள் கேட்டன. இடையிடையே யாரோ ஒருவர் மரணாவஸ்தையில் முனகுவது போன்ற சப்தமும் கேட்டது.

தோட்டத்தைச் சுற்றித் தேடப் போனவர்களில் ஒருவன் விரைவில் திரும்பி வந்தான். அவன் கொண்டு வந்த பொருள்களைத் திருமலை நம்பி கதவிடுக்கின் வழியாக வந்த விளக்கின் ஒளிக் கிரணத்தில் உற்றுப் பார்த்தான். அவை இளவரசர் மதுராந்தகத் தேவர் வழக்கமாக அணியும் கிரீடம், இரத்தின ஹாரம், வாகுவலயம் முதலிய ஆபரணங்கள் என்று அறிந்துகொண்டான். அவற்றுடன் மதுராந்தகர் உத்தரீயமாகத் தரிக்கும் பீதாம்பரமும் இருந்தது. இவற்றைப் பார்த்ததும் ஆழ்வார்க்கடியானுடைய மனத்தில் உண்டான திருப்தி அவனுடைய முகத்தில் பிரதிபலித்தது.

"சரி; தேடியது போதும்! மற்றவர்களையும் இங்கே கூப்பிடு. எல்லாரும் கையில் ஆயுதம் ஏந்தி எதற்கும் ஆயத்தமாக நில்லுங்கள்!" என்று கூறிவிட்டு, ஆழ்வார்க்கடியான் குடிசையின் கதவை இலேசாகத் தட்டினான்.

உள்ளிருந்து மறுமொழி வராமற் போகவே, மீண்டும் தடதடவென்று கதவை வலுவாகத் தட்டினான்.

"யார் அங்கே? இங்கு என்ன வேலை?" என்று பூங்குழலியின் குரல் கேட்டது.

"அம்மணி! நான்தான் ஆழ்வார்க்கடியான் என்கிற திருமலை நம்பிதாஸன். தயவு செய்து கதவைத் திறந்து அருள வேண்டும். முக்கியமான காரியம் இருக்கிறது!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

உள்ளே காலடிச் சப்தம் கேட்டது. பூங்குழலி கதவண்டையில் வந்து நின்று, "அப்படி என்ன முக்கியமான காரியம் இங்கே உமக்கு வைத்திருக்கிறது? நீரோ வீர வைஷ்ணவர். இதுவோ சிவனடியார்களின் குடிசை. இந்த வீட்டின் எஜமானருக்கு உடம்பு நலமில்லையென்பது உமக்குத் தெரியும். இரவு நேரத்தில் வந்து எதற்காகத் தொந்தரவு செய்கிறீர்?" என்றாள்.

ஆழ்வார்க்கடியான், "சமுத்திரகுமாரி! நான் வீர வைஷ்ணவன்தான்! அதனாலேயே துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்யும் பொருட்டு வந்தேன். கதவை உடனே திறக்காவிட்டால் உடைத்துத் திறக்கப்படும்!" என்றான்.

"வைஷ்ணவரே! அவ்வளவு பெரிய வீராதி வீரரோ நீர்? உமது வீரத்தை எங்களிடம் காட்டவா வந்தீர்?" என்று சொல்லிக்கொண்டே பூங்குழலி குடிசைக் கதவைத் தடால் என்று திறந்தாள். அவளுடைய கயல்விழிகளில் கோபக்கனல் பறந்தது.



ழ்வார்க்கடியான் மீது தன் கோபத்தைக் காட்ட எண்ணியவள் அவனுக்கு அப்பால் வீரர்கள் சிலர் நிற்பது கண்டு திடுக்கிட்டாள். உடனே, கோபத்தைத் தணித்துக்கொண்டு, "ஐயா! இது என்ன? இவர்கள் யார்? எதற்காக இங்கே வந்திருக்கிறார்கள்? உம்முடனே தான் வந்தார்களா?" என்றாள்.

"ஆம்; என்னுடனேதான் வந்தார்கள். இராஜாங்கக் காரியமாக வந்திருக்கிறார்கள். இவர்களுடைய காரியத்தைத் தடை செய்கிறவர்கள் இராஜ தண்டனைக்கு உள்ளாக நேரிடும்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"நல்ல இராஜாங்கக் காரியம்; நல்ல இராஜ தண்டனை, இந்த மாதிரி பேச்சுக்களையெல்லாம் கேட்காமல் எப்போது கோடிக்கரைக்குப் போய்ச் சமுத்திரத்தின் அலை ஓசையைக் கேட்டுக் கொண்டு நிம்மதியாக இருக்கப் போகிறோம் என்றிருக்கிறது. போகட்டும்; இவர்களையெல்லாம் கொஞ்சம் தூரத்தில் இருக்கச் சொல்லி விட்டுத் தாங்கள் மட்டும் உள்ளே வாருங்கள். இந்த ஓட்டைக் குடிசைக்குள்ளே என்ன இராஜாங்கக் காரியம் வைத்திருக்கிறதோ, தெரியவில்லை. அதைப் பார்ப்பதற்குத் தாங்கள் ஒருவரே போதாதா? அத்தான் அதோ கட்டிலில் படுத்து வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறார். இவர்கள் உள்ளே வந்தால் அவர் திடுக்கிடுவார். அதனால் அவர் உடம்பு இன்னும் சீர்கேடடையும்!" என்றாள்.

ஆழ்வார்க்கடியான் குடிசைக்குள் பிரவேசித்ததும் அவனாகவே கதவை மறுபடியும் சாத்தித் தாளிட்டான்.

பூங்குழலி! உன்னுடைய வார்த்தை மிக்க வியப்பாயிருக்கிறது. இராஜாங்கக் காரியங்களின் பேரில் உனக்கு இவ்வளவு அருவருப்பு எப்போது உண்டாயிற்று? பட்டத்து இளவரசரை மணந்து சிங்காதனம் ஏறும் உத்தேசம் என்ன ஆயிற்று? அவ்வாறு நடக்கும்போது இராஜாங்கக் காரியங்களில் முழுக்க முழுக்கக் கவனம் செலுத்தித் தானே ஆக வேண்டும்?" என்றான் திருமலை.

"ஐயா, வைஷ்ணவரே! அந்த உத்தேசத்தை நான் அடியோடு விட்டு விட்டேன். சென்ற சில தினங்களில் இராஜ்ய பாரம் தாங்குவது என்பது எவ்வளவு சங்கடமான காரியம், எத்தனை மனவேதனை தரும் விஷயம் என்பதைத் தெரிந்து கொண்டேன். சிங்காதனம் இருக்குமிடத்துக்குப் பத்து காத தூரத்திலே வருவதற்குக் கூட இனி நான் பிரியப்பட மாட்டேன். வைஷ்ணவரே! உமக்கு ஒரு சந்தோஷச் செய்தி தெரிவிக்கிறேன். என் அத்தான் சேந்தன் அமுதனை மணந்து கொள்ள நான் முடிவு செய்து விட்டேன். சற்று முன் இங்கு வந்த செம்பியன் மாதேவியிடம் சொல்லி அவருடைய ஆசியும் பெற்றுக் கொண்டோம். அமுதனுக்கு உடம்பு கொஞ்சம் குணமானதும் இருவரும் கோடிக்கரைக்குப் புறப்பட்டுப் போய் விடுவோம்..."

ஆழ்வார்க்கடியான் குறுக்கிட்டு, "ஆகா! நல்ல தீர்மானம் செய்தீர்கள்!

**ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ**
**வானாளும் செல்வமும்**
**மண்ணரசும் யான் வேண்டேன்**
**தேனார் பூஞ்சோலை திருவேங்கடச் சுனையில்**
**மீனாய்ப் பிறக்கும் விதியுடையேனாவேனே!**

என்று ஆழ்வார் அருளிச் செய்திருக்கிறார் அன்றோ? அதுபோல் நீங்களும் இந்த 'மண்ணரசு வேண்டாம்' என்று தீர்மானித்துக் கோடிக்கரைக் கடலில் மீன்களோடு மீன்களாக வாழலாம் என்று எண்ணினீர்கள் போலும்! ஆனாலும் யார் கண்டது? சிரஸிலே கிரீடத்தைச் சுமந்து சிங்காதனத்தில் வீற்றிருக்க வேண்டும் என்கிற விதி இருந்தால், அந்தப்படியே நடந்து தீரும். வேண்டாம் என்றாலும் விடாது!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"போதும் ஐயா, பரிகாசம்! எதற்காக இங்கு வந்தீர்கள் என்பதைச் சொல்லுங்கள்!" என்றாள் பூங்குழலி.

"அம்மணி! தாங்கள் 'மண்ணரசு ஆளும்' ஆசையை மட்டும் விட்டொழித்திருக்கிறீர்களா? அல்லது தாங்களும் சேந்தன் அமுதனும் இந்த மண்ணுலகை

உயிரோடு வாழும் ஆசையையே விட்டொழித்து விட்டீர்களா? இதைத் தெரிந்து கொண்டு போகவே வந்தேன்!" என்றான் வைஷ்ணவன்.

"இது என்ன கேள்வி? இம் மண்ணுலகில் இன்னும் சில காலம் வாழும் ஆசை எங்கள் இருவருக்கும் இருக்கிறது. இன்றைக்குத்தானே நாங்கள் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்திருக்கிறோம்? வைஷ்ணவரே! எங்களுக்கு வாழ்த்துக் கூறுங்கள்! அத்தான் விரைவில் குணமடையுமாறும் ஆசி கூறுங்கள்!" என்றாள் பூங்குழலி.

"நான் வாழ்த்துக் கூறவும் ஆசி கூறவும் சித்தமாயிருக்கிறேன். ஆனால் என் வாழ்த்தும் ஆசியும் வீணாகப் போகலாகாது. உங்களிருவருக்கும் இவ்வுலகில் உயிரோடு வாழும் எண்ணம் இருந்தால், பாதாளச் சிறையிலிருந்தவர்கள் தப்பி ஓடுவதற்கு ஏன் உதவி செய்தீர்கள்?" என்று கேட்டான் திருமலை.

பூங்குழலி முகத்தில் வியப்பை வருவித்துக்கொண்டு, "இது என்ன? எங்களுக்கு ஒன்றுமே தெரியாதே? யாரும் தப்பி ஓடுவதற்கு நாங்கள் உதவி செய்யவே இல்லையே?" என்றாள்.

"கரிகாலரைக் கொன்றவன் என்று குற்றம் சாட்டப்பட்டுப் பாதாளச் சிறையிலிருந்த வந்தியத்தேவனும் மற்றொரு பைத்தியக்காரனும் இன்று தப்பிச் சென்றுவிட்டார்கள். அவர்கள் இந்த நந்தவனம் வரையில் வந்ததாகத் தெரிகிறது. பிறகு, இங்கிருந்து இரண்டு குதிரைகளில் இருவர் ஓடிப் போயிருக்கிறார்கள். இந்தக் குடிசைக்குப் பக்கத்தில் ஓரிடத்தில் மண்ணில் இரத்தம் சிந்தியிருக்கிறது. பலர் இந்த இடத்துக்கு வந்து போன அடையாளங்களும் இருக்கின்றன. ஆகையால் நீங்கள் தான் தப்பி ஓடியவர்களுக்கு உதவி செய்திருக்க வேண்டுமென்று அனுமானிக்கப்படுகிறது. முதன்மந்திரி அநிருத்தருக்கு உங்கள் பேரில் உள்ள அபிமானத்தினால் என்னை அனுப்பி வைத்தார். கொடும்பாளூர் வேளாரின் ஆட்கள் வந்திருந்தால் உங்களை உடனே சிறைப்படுத்தியிருப்பார்கள்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"முதன்மந்திரிக்கும் உங்களுக்கும் மிக்க நன்றி. வைஷ்ணவரே! அத்தானுக்கு இன்னும் இரண்டு தினங்களில் உடம்பு சரியாகிவிடும். உடனே நாங்கள் புறப்பட்டுக் கோடிக்கரை போய் விடுகிறோம். அப்புறம் இந்தத் தஞ்சாவூர்ப் பக்கமே எட்டிப் பார்ப்பதில்லை. அதுவரையில் தாங்கள் தான் எங்களை இராஜ சேவகர்கள் யாரும் தொந்தரவு செய்யாமல் உதவி புரிய வேண்டும்!" என்று வேண்டினாள் பூங்குழலி.

"நான் உதவி புரிவதில் தடையில்லை. ஆனால் நீங்கள் உண்மையைச் சொல்ல வேண்டும்! இங்கே உங்கள் மூன்று பேரையுந் தவிர வேறு யாருமே வரவில்லையா?" என்று கேட்டான்.

"ஏன் வரவில்லை? இப்போது நீங்கள் வந்திருக்கிறீர்கள்! சற்று முன்னால் செம்பியன் மாதேவியும் இளவரசர் மதுராந்தகரும் வந்து அத்தானின் உடம்பைப் பற்றி அன்புடன் விசாரித்து விட்டுப் போனார்கள். இப்போதுதான் தஞ்சாவூர்க் கோட்டையைச் சுற்றி எங்கே பார்த்தாலும் போர் வீரர்களின் நடமாட்டமாயிருக்கிறதே? யார் வந்தார்களோ, யார் போனார்களோ, எங்களுக்கு எப்படித் தெரியும்? வைஷ்ணவரே! நீங்கள் முதலில் கேட்ட கேள்விக்கு மட்டும் மறுமொழி நிச்சயமாகச் சொல்லுகிறேன். இங்கிருந்து தப்பிப் போவதற்கு நாங்கள் யாருக்கும் உதவி செய்யவில்லை...!"

"இது சத்தியமான வார்த்தையா?"

"ஆம்; சத்தியமாகச் சொல்கிறேன். இங்கிருந்து யாரும் தப்பி ஓடுவதற்கு நாங்கள் உதவி செய்யவில்லை!"

"அப்படியானால், சிறையிலிருந்து தப்பி ஓடி வந்த வந்தியத்தேவன் இந்தக் குடிசையிலேதான் இப்போது இருக்க வேண்டும்!" என்றான் திருமலை.

அவன் இவ்விதம் சொல்லி வாய் மூடுவதற்குள் சேந்தன் அமுதன் படுத்திருந்த கயிற்றுக் கட்டிலின் அடியிலிருந்து வேதனை நிறைந்த பரிதாபமான முனகல் சப்தம் கேட்டது.

(தொடரும்)

# ஒருமுறை விஜயம் செய்தால்

## மீண்டும் மீண்டும் வரத்தூண்டும் உங்கள் லக்ஷ்மி முத்து மாளிகை!

முன்பெல்லாம் பத்திரிகையை பார்த்தால் பொருட்களைப் பற்றித்தான் விளம்பரங்கள் வந்து கொண்டிருந்தது. சமீப காலங்களில் எந்த பத்திரிகையை பார்த்தாலும் முத்து மணி மாலைகள், ஜோதிட விளம்பரம், ராசிக் கல் அணிந்து உங்கள் பிரச்னைகளுக்கு தீர்வு காணுங்கள் என்று நிறைய வந்து கொண்டிருக்கிறது. சென்னையில் எல்லா பொருட்களும் கிடைக்கக் கூடிய (அம்மா, அப்பாவைதவிர) இடமாகக் கருதப்படும் தி. நகரில் **Kasi Arcadeல் லக்ஷ்மி முத்து மாளிகைக்கு** நாம் விஜயம் செய்து அதன் உரிமையாளரான சைதையா தொண்டப்புவை சந்தித்தோம்.

இந்த லக்ஷ்மி முத்துமாளிகை 1979ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. நாங்கள் பரம்பரை பரம்பரையாக இந்தத் தொழிலை செய்து வருகிறோம். முத்துக்குப் பிறப்பிடம் ஹைதராபாத் என்று பலர் நினைக்கிறார்கள். முத்துக்கு உரிய இடம் சைனாதான். நாங்கள் தரமான முத்துக்களை சைனாவிலிருந்து இறக்குமதி செய்கிறோம். முத்துக்கள் மட்டுமல்லாமல் இறக்குமதி செய்யப்பட்ட மணிமாலைகள் வாடிக்கையாளர்கள் விருப்பத்திற்கு ஏற்ப ஆர்டரின் பேரில் செய்து தருகிறோம். மணிக் கற்களுக்கு எங்களுடைய கடை புகழ் பெற்றுள்ளது. உதாரணமாக மாணிக்கக் கற்கள் வெளிக் கடைகளில் கேரட் ரூ. 600/-என்றால் எங்களிடம் ரூ. 200 என்று இருக்கும். எப்படி இவ்வளவு குறைந்த விலையில் கொடுக்க முடியும் என்று நீங்கள் நினைக்கலாம். ஏனென்றால் நாங்களே தயாரிப்பதால் எங்களுக்கும் நுகர்வோருக்கும் இடையில் இடைத்தரகர்கள் யாரும் கிடையாது. இதனால்தான் மற்ற கடைகளில் விற்கப்படும் விலைக்கும் எங்களுக்கும் நிறைய வேறுபாடுகள் இருக்கிறது. இன்றைய நவநாகரிகத்திற்கு ஏற்ப ரத்தின கற்களால் செய்யப்பட்ட கைகடிகாரத்திற்கு முத்துக்கள் மற்றும் சிவப்பு நிறமுள்ள ஒருவகை மணிக் கல்லால் கடிகாரப் பட்டை செய்து தருகிறோம். இதன் விலை ரூ. 750 மட்டுமே. இதோடு இல்லாமல் ஒரு கிராம் தங்கத்தில் வளையல்கள் ரூ. 500க்கு விற்கிறோம். மேலும் எங்களிடம் ரூ. 250க்கு மேல் பொருட்கள் வாங்கும் வாடிக்கையாளர்களுக்கு கவர்ச்சிகரமான சிறப்புப் பரிசும் தருகிறோம். 24 கேரட் கோல்டு பிளேட்டட் வளையல்கள் ரூ.250/-க்கு தருகிறோம். ( 6 மாதம் உத்திரவாதம் உண்டு) எங்களுடைய சேவை வாடிக்கையாளர்களுக்கு மிகவும் திருப்தியாக இருக்கிறது. நாங்கள் இலவச ஜாதக ஆலோசனையும் செய்வதோடு மேலும் பெண்களுக்கு சுடிதார், நைட்டீஸ் போன்றவைகளும் விற்பனை செய்து வருகிறோம். *மார்ச் 1முதல் 31 வரை வருடாந்திர கணக்கு சிறப்புத் தள்ளுபடி விற்பனை வேறு எங்கும் பார்க்காத மிகவும் தரமான பொருட்களை மிகக் குறைந்த விலையில் தருகிறோம்.*

ரூ. 500 மதிப்புள்ள நாற்பது வண்ணங்கள் கொண்ட Japan cutbeads one bunch (12 lines) ரூ.200/-க்கு நாங்கள் தருகிறோம். (ஒரு நபருக்கு 5 bunch மட்டுமே) நாங்கள் புதிதாக அறிமுகப்படுத்தியுள்ள FIBRE WITH AMERICAN DIAMOND STONE BANGLES எங்களிடம் மட்டுமே கிடைக்கும்.

*** எங்களிடம் ரூ.1500/-க்கு மேல் பொருட்கள் வாங்குபவர்களுக்கு 1கிராம் கோல்ட் வளையல்கள் (அ) 24 கேரட் கோல்ட் பிளேட்டட் வளையல்கள் இலவசம்.**

SaidaiahThondappu

வாடிக்கையாளர்களின் பேராதரவு இருப்பதால்தான் நாங்கள் **'ஸ்ரீ லக்ஷ்மி முத்து மாளிகை'** 157/203, ஆர். கே. மடம் சாலை, மந்தைவெளி என்ற விலாசத்தில் மற்றொரு கிளையை சமீபத்தில் திறப்பு விழா செய்ததில் ஆச்சரியம் எதுவுமில்லை.

**DEALERS IN: HYDERABAD PEARLS** (BLACK, PINK, WHITE, ROUND, MIKIMOTO, OVEL, BUTTON, RICE)**REAL ITALIAN CORELS**(ROUND, OVEL, PINK, THALI, FLOWERS, TUBE)**CHINA JADE MALAS, REAL RUBY, EMERALD, SAFFIRE, CUT AND ROUND MALAS, NAVARATNA STONES AND MALAS, LUCKY BIRTH STONES, AMERICAN DIAMOND SILVER JEWELLERY** (BANGLES, TOPS, RINGS, NECKLACE SETS, PENDANT SETS, CHOKER, BRACE LETS, RANIHAR SETS, SHAJAHAW SETS, LONG HARAMS), **GOLD RUBY, EMERALD NECKLACE SETS, ONE GRAM AND TWO GRAMS GOLD BANGLES, ANTIQUE IMPORTED 40 COLOUR BEEDS, PEARLS AND GEM WATCHES, SEMI-PRECIOUS STONE MALAS** (GARNET, JADE)

**T. Nagar Ph: 8220856**

**Mandeiveli Ph: 4617499, 4617655**

Advt

# உப்பு மூட்டை

உடம்பில் உப்பின் அளவு அதிகரித்தால், கண்களுக்குக் கீழே கருவளையம் விழும். கருவளையம் விழுந்தால், உணவில் உப்பின் அளவைக் கட்டுப்படுத்துங்கள் என்பதுதான் கண்கள் சொல்லும் பாடம்.

கண்ணைப் போலவே, நம்முடைய சருமமும் உடம்பில் உள்ள உப்பின் அளவைக் காட்டும் மீட்டர் என்று கூறலாம். உப்பு அளவுக்கதிகமானால், சருமத்தில் நாற்பது வயதிலேயே சுருக்கங்கள் ஏற்பட்டுவிடும்.

சிலருக்கு எந்தவிதமான காரணமும் இல்லாமலேயே, கால் வீங்கும். வீங்கின பகுதியை விரலால் அழுத்தினால், ஸ்பாஞ்சு போல குழி விழும். இதுவும், உடம்பில் உப்பு அதிகம் ஆவதால்தான். குறிப்பாக, சிறுநீரகங்கள் முழு வீச்சில் செயல்பட்டு, தேவையற்ற உப்பு மற்றும் அசுத்தங்களைச் சரிவர வடிகட்டி, ரத்தத்தைச் சுத்திகரிக்கவில்லை என்பதே இதற்குக் காரணம்.

சிலர், உடம்பில் உப்பு அதிகமாகிவிட்டால், உப்பைக் குறைக்கிறேன் பேர்வழி என்று சாப்பாட்டில் உப்பைக் குறைத்துக் கொள்ளுவார்கள். ஆனால், ஊறுகாய், வற்றல், வடாம், சிப்ஸ் போன்ற ஐட்டங்களை ஒரு பிடி பிடிப்பார்கள். இவற்றில் உப்பு கூடுதலாகவே இருப்பதை மறந்து விடுவார்கள்.

உடம்பில், உப்பு குறைந்து, ரத்த அழுத்தக் குறைவு ஏற்பட்டாலும் ஆபத்துதான். இதன் காரணமாக, திடீரென மயக்கம் ஏற்படும். உடனடிச் சிகிச்சையாக என்ன செய்யலாம்? இளநீரில், சிறிது சர்க்கரையும் உப்பும் கலந்து கொடுக்கலாம். இளநீர் கிடைக்காதபோது, மோரில் உப்பு கலந்து தரலாம். வீட்டில் நீராகாரம் இருக்குமானால், அதில் உப்பு போட்டுக் கொடுக்கலாம். உடனடி பலன் கிடைக்கும்.

சுருக்கமாகச் சொல்ல வேண்டும் என்றால், காற்று, சூரிய ஒளி போல, மனிதன் உயிர் வாழ்வதற்கு உப்பு முக்கியம். ஆரோக்கியமான வாழ்க்கைக்கு, சத்தான உணவு எந்த அளவுக்கு முக்கியமோ, அந்த அளவு, அளவான உணவும் அவசியம் என்பதை அடிக்கோடிட்டுக் கூற விரும்புகிறேன்.

அடுத்து, உப்பின் மருத்துவ குணங்கள் பற்றிச் சொல்லப் போகிறேன்.

உப்புக்கு, மஞ்சள்போல ஆன்டி - செப்டிக் குணம் உண்டு. உப்பு இருக்கிற இடத்தில், எந்த விதமான கிருமிகளும் வளராது. அதனால்தான், எகிப்து நாட்டில், பண்டைய காலத்தில், 'மம்மி' என்று சொல்லப்படும் இறந்த உடல்களைப் பாடம் செய்தபோது, அதிக அளவில்



**'மூலிகை மணி' டாக்டர் க.வேங்கடேசன்**

# ஒத்தடம்?

உப்பைப் பயன்படுத்தினார்கள். நம் ஊர்களில்கூட, துறவிகள், இறந்தபிறகு, அவர்களைச் சமாதிக்குள் வைக்கிறபோது, அவர்களின் உடலுடன் கூடவே நிறைய உப்பையும் கொட்டி வைப்பதை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்.

உப்பு கிருமிநாசினி மட்டுமில்லை. வலி நிவாரணியும்கூட. காலில் முள் குத்திவிட்டால், முள்ளை எடுத்துவிட்ட பின்னரும்கூட சுருக், சுருக்கென்று வலி மட்டும் தொடர்ந்து இருந்து கொண்டே இருக்கும். அப்போது, வெதுவெதுப்பான தண்ணீரில், ஒரு பிடி உப்பைக் கரைத்து, அதில் முள் குத்திய பாதம் நன்கு மூழ்கும்படி வைத்திருக்க வேண்டும். இப்படி ஒரு அரை மணி நேரம் காலை வைத்திருந்தால், வலியிலிருந்து நிவாரணம் கிடைக்கும். காலில் ஆணித் தொல்லையால் அவதிப்படுகிறவர்கள்கூட, இந்த முறையைக் கையாண்டு, நாளடைவில் நிவாரணம் பெற முடியும்.

காலில் சிலருக்கு, வெடிப்புகள் இருக்கும். நடக்கவே சிரமப்படுவார்கள். அவர்கள் தினமும் இரவு நேரத்தில் உப்பிட்ட வெந்நீரில் கால் வைத்திருந்து, அதன் பின்னர் களிம்புத் தடவிக் கொண்டால், சீக்கிரமே வெடிப்புகள் மறையும். குதி கால் வலியால் அவதிப்படுகிறவர்களும் இதைச் செய்து பயனடையலாம்.

களுக்கு, வீக்கம் ஏற்படுகிறபோது, கொஞ்சம் உப்புத் தண்ணீரில், சிறிதளவு புளி, மஞ்சள் பொடி போட்டு குழம்பு மாதிரி கொதிக்க வைக்க வேண்டும். பசையாக இறுகியதும் இறக்கி ஆற வைத்து, உடல் பொறுக்கும் சூட்டில், வீக்கம் உள்ள பகுதியில் பற்றுப் போட்டால், வீக்கம் சீக்கிரம் வடிந்து விடும்.

அதுபோலவே, குளவி மற்றும் பூச்சி கடித்துவிட்டாலும் உப்பை, கடிவாயில் வைத்து நன்றாகத் தேய்த்தால், விஷம் இறங்கும். இதுவும் கிராமத்து வைத்தியம்.

இருமல், தொண்டைக் கட்டு போன்ற தொல்லைகளுக்கும் உப்பு மருந்தாகப் பயன்படுகிறது. உப்புக் கரைசல் நன்றாக தொண்டைப் பகுதியில் படும்படி அண்ணார்ந்து கொண்டு, கொப்பளிக்கலாம். இதற்கு உபயோகிக்கும் உப்பு நீர், வெதுவெதுப்பான சூட்டில்தான் இருக்க வேண்டும். கொதிக்கக் கொதிக்க இருந்தால், ரணமாகிவிடும்.

குழந்தைகள் இதைச் செய்கிறபோது, உப்புத் தண்ணீர் தொண்டைக்குள்ளே போய்விடாதபடி கவனமாக இருக்க வேண்டும். இருமல், தொண்டைக்கட்டுக்கு, இதையே முழுமையான சிகிச்சையாக எடுத்துக் கொள்ள



வேண்டாம். ஆனால், இதையும் ஓர் உப சிகிச்சையாக செய்து பயனடையலாம். தினம் மூன்று தடவை இதைச் செய்யலாம்.

உப்பு, பற்களைப் பளிச்சிட வைக்கும். பற்பொடியைப் பயன்படுத்தி, பல் தேய்க்கிறவர்கள், அதில் சிறிது உப்பையும் சேர்த்துக் கொள்ளலாம்.

வலி, வீக்கம் இவற்றுக்கு உப்பு ஒத்தடம் கொடுக்கலாம். ஒரு துணியில் ஒரு கைப்பிடி அளவு உப்பைப் போட்டு, சிறுமூட்டை போல கட்டிக் கொள்ளுங்கள். சிறிதளவு நல்லெண்ணெயை நன்கு காய்ச்சி அதில் இந்த உப்பு மூட்டையைப் போட்டு சில நிமிடங்கள் வைத்திருக்கவும். எண்ணெயை உப்பு கொஞ்சம் கொஞ்சமாய் உறிஞ்சு கொள்ளும். புறங்கையில் வைத்து சூடு பார்த்து, பொறுக்கிற சூட்டில் வலி வீக்கம் உள்ள இடத்தில் ஒத்தடம் தரவும். வலிக்கு இதமாய் இருக்கும். வலியும் மறையும்.

டாக்டர் க.வே.அபிராமி

## சூர்யா

ஒரு காலத்தில், கோடம்பாக்கத்தில், 'மென்மையான காதலனா, கண்ணியமான கதாநாயகனா, கூப்பிடுங்க சிவகுமாரை' என்பார்கள். இப்போது ஜெனரேஷன் நெக்ஸ்ட். சூர்யா வந்திருக்கிறார்.

அல்ட்ரா மாடர்ன் சென்னை இளைஞன். அப்பாவை நகலெடுத்த மாதிரி தோற்றம். அரை டஜன் படங்கள் செய்தும் இன்னும் புதுமுகம் போல ஆவின் முகம்.

'ஜோதிகாவுக்கும் உங்களுக்கும் காதலாமே?' என்றால், 'அப்படி யாவது பப்ளிசிட்டி கிடைச்சா சந்தோஷம்தான்' என்று சிரிக்கிறார்.

இடையில் சில சறுக்கல்களைச் சந்தித்தவர், 'ப்ரண்ட்ஸ்', 'நந்தா' என்று மீண்டும் பரபரப்பாகியுள்ளார்.

சிவகுமார் கவுண்டம்பாளையத்து ஆள். நீங்க மெட்ரோமேன்... நடிகராக இரண்டு பேருக்கும் என்ன வித்தியாசம்?

"அப்பாவுக்குப் பெரிய கனவிருந்தது. இந்த வாழ்க்கைக்காக நிறைய கஷ்டப்பட்டிருக்கிறார். ஆனா, நான் அப்படி இல்லை. லயோலாலே படிப்பு முடிஞ்சதும், 'ஆளை வுடுங்க சாமி'னு டெக்ஸ்டைல் கம்பெனிக்கு வேலைக்குப் போயிட்டேன். வேலைக்குச் சேர்ந்து ரொம்ப நாள் பஸ்லதான் போய்க்கிட்டிருந்தேன். நடிகர் மகன்னா நடிகனாதான் ஆகணுமான்னு நினைச்சேன். ஆயிரம் ரூபான்னாலும் நானும் சம்பாதிச்சேங்கிற சந்தோஷத்துல திருப்தியா இருந்தேன்.

சொந்தமாவே கார்மென்ட்ஸ் கம்பெனி ஆரம்பிக்கலாங்கிற எண்ணத்துல இருந்தப்பதான் சினிமா சான்ஸ் வந்துச்சு. திடீர்னு ஒருநாள் மணிரத்னம், வசந்த் வந்தாங்க. "சரவணா, நீ நடிக்கிறே... 'சூர்யா'னு பேரு... நாளைக்கு ஷூட்டிங். வந்துடு'னு ரொம்ப கேஷுவலா சொன்னாங்க. அப்பாகிட்டேயும் பேசினாங்க. அவ்வளவு பெரிய



ஆளுங்க வீடு தேடி வந்து கூப்பிட்டது பெரிய சந்தோஷம். அப்பாக்கும் பிடிச்சிருந்தது. ஒரே நிமிஷத்துல, எல்லாத்தையும் விட்டுட்டு சின்சியரா நடிகனாயிட்டேன். அப்பா கஷ்டப்பட்டு நடிகரானார். எனக்குப் பின்னணி இருந்ததால உடனே வாய்ப்பு கிடைச்சுடுச்சு...





கிராமத்துக்கும் பெரிய வித்தியாசமில்லே. அப்பா மாடர்னா வேஷம் போட்டு, சிங்கப்பூர் ல

டுயட் பாடியிருக்கார். நான் 'ப்ரண்ட்'க்காக பொள்ளாச்சியில ரேக்ளா வண்டி ஓட்டியிருக்கேன்."

**பலத்த முயற்சிகள் எதுவுமில்லாம, தற்செயலா நடிகனானதாலதான் இடையில் தோல்விப் படங்களா கொடுத்தீங்களோ?**

"அப்படி இல்ல. சில கதைகளைக் கேட்கும் போது நல்லாயிருக்கும். ஆனா விஷுவலைஸ் பண்ணும்போது எதிர்பார்த்த ரிசல்ட் வராது. 'சந்திப்போமா?' படத்தை நானும் அப்பாவும் கதை கேட்டுதான் ஓ.கே செய்தோம். ஆனா எடுக்கும்போது, கொஞ்சம் வேறே மாதிரி எடுத்துட்டாங்க. சினிமாவுல இதைத் தவிர்க்க முடியாது. உண்மையா உழைக்



ஆனா நகரத்துக்கும்,

# "அப்பாவுடன் பத்து நாள் பேசலை!"

கிறேன். படம் நல்லா வரணும்னு துடிக்கிறேன். ஜெயிச்சா சந்தோஷம்.''

**இப்ப விஜய், அஜீத், மாதவன் முன்னணியிலே பேசப்படறாங்க. உங்க இடம்னு எதை நினைக்கறீங்க?**

''நம்பர் ஒன், நமக்கான இடம், இதிலெல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை. 'சேது' படப்பூஜை அன்னிக்கு, எல்லோரும் வந்துட்டாங்க. டைரக்டர் பாலா மட்டும் வரலை. அப்புறம்தான் பூஜை நின்னுபோச்சுங்கறது தெரிஞ்சிருக்கு. எல்லார்கிட்டேயும் சொல்லி, அழைப்பிதழ் எல்லாம் அடிச்சு, தடபுடலா ஏற்பாடெல்லாம் செஞ்ச பிறகு, பூஜையே நின்னு போச்சுன்னா எவ்வளவு பெரிய சோகம். இன்னிக்கு அவர் தேசிய விருது இயக்குனர். நம்மளை மீறின சில விஷயங்கள் இருக்குங்கறதை நான் உணர்ந்திருக்கேன். அதனால 'நம்பர் ஒன்' பற்றியெல்லாம் கவலைப்படறதில்லை. நாலு பேர் என்னோட படத்தைப் பார்த்துட்டு, 'சூர்யா, நல்லா நடிச்சிருக்காம்பா'னு சொல்றதுதான் என்னோட இடம்.''

**'ப்ரண்ட்ஸ்' படத்துல விஜய்யோட சேர்ந்து நடிச்சதால உங்க மதிப்பு, இமேஜ் குறையும்னு தோணலையா?**

''ப்ரண்ட்ஸ்'க்காக வந்து கேட்டப்போ, அப்பாவுக்குச் சம்மதமில்லை. வேண்டாம்னுட்டார். நான் ரொம்ப அப்செட் ஆயிட்டேன். பத்துநாள் அவர் கூட பேசாம கோபமா இருந்தேன். அப்புறம் அவரா இளகிப் போய் 'உனக்குத் தோன்றதைச் செய்'னு சொல்லிட்டார். அதோட சரி, அப்புறம் ஒரு வார்த்தைகூட படத்தைப் பத்திக் கேட்டுக்கல. கடைசிலே 'ப்ரீவ்யூ' பார்த்துட்டு, 'பரவாயில்ல... தேறிட்ட'னு பாராட்டினார். என் மேல எனக்கிருந்த நம்பிக்கைதான் காரணம். இன்னொன்று, நானும் விஜய்யும் உண்மையிலேயே, காலேஜ்லேருந்து நண்பர்கள்ங்கறதால, ப்ரண்ட்ஸ்ல எந்தக் குழப்பமும் வரலை.''

**'நந்தா'வைப் பற்றிச் சொல்லுங்க சூர்யா.**

''சேது, பார்த்து பிரமிச்ச பலர்ல நானும் ஒருத்தன். இப்ப டைரக்டர் பாலாகூட ஒர்க் பண்றது ரொம்ப பெருமையா இருக்கு. இலேசா கண்ணைச் சுருக்கிக்கிட்டு, வசனம் பேசறது மட்டும் நடிப்பில்ல. உடம்பே பேசணும்னு அவர்கிட்டே கத்துக்கிட்டேன். ஹி ஈஸ் கிரேட்.''

**'சேது' விக்ரம், 'நந்தா' சூர்யா – என்ன வித்தியாசம்?**

''மொட்டை அடிச்சிக்கிட்டு, போஸ் தர்றதால 'சேது' மாதிரினு பல பேர் நினைக்கறாங்க. அப்படியெல்லாம் இல்லை. அது வேறு, இது வேறு.''

**நந்தாவுடைய அடித்தளம் என்ன?**

''வன்முறை...''

**அப்புறம்...?**

''வயலன்ஸ் வித் லவ்...''

**அப்புறம்?**

''மே மாசம் தியேட்டர்ல பார்த்துக்கோங்க...!''

**எப்ப டும்... டும்...?**

''ஏன், நான் கொஞ்சம் ஜாலியா இருக்கறது உங்களுக்குப் பிடிக்கலையா? இன்னும் ரெண்டு வருஷம் கழிச்சுதான் எல்லாமே. அநேகமா அப்பா அம்மா பார்க்கற பொண்ணுதான் இருக்கும்னு நினைக்கிறேன்.''

அப்பாடா! இன்னும் இரண்டு வருஷத்துக்குப் பெண்ணைப் பெற்றவர்களும், இளம் பெண்களும் நிம்மதியாய்த் தூங்கலாம்!

**— அபிவை முருகன்**

**''நம்ம தலைவர் எங்கே போனாலும் மக்களைப் பார்த்து இரண்டு விரலைக் காட்றாரே ஏன்...?''**

**''ஊழல் வழக்கில் சிக்கி இரண்டு ஆண்டு தண்டனை பெற்றதை அப்படி சிம்பாலிக்கா காட்டுறார்!''**

**— கே. கலியபெருமாள்**





முக்கிய இடங்களுக்கான டிக்கட்டை வாங்கிக் கொண்டு, நோவோடெல்-லோடஸ் ஓட்டலுக்குப் போவதற்கான டாக்ஸிக்கும் ஏற்பாடு செய்து விட்டு வெளியே வருவதற்குள், டாக்ஸி ஓட்டுநர் கையில் நம் பெயர் எழுதிய அட்டையுடன் காத்திருந்தார். "இவர்தான் காரின் உரிமையாளர். டாக்ஸி அல்ல!" என்றார் டூரிஸம் பெண் மணி. ஓட்டலுக்குப் போக ஒருமணி நேரப் பயணம் என்பதால் 600 பாட் (கிட்டத்தட்ட 600 ரூபாய்)! நேரம் இரவு பத்து மணியைத் தாண்டிவிட்டது. வெளியே வந்து டாக்ஸியைப் பிடித்திருந்தால் 250-300 பாட் தான் ஆகியிருக்கும்...

மறுநாள் காலை ஏழு

# சென்னை டு சைனா

சைனா ஏர்வேஸ் விமானத்தில் ஏறி, பாங்காக்கை அடைந்தபோது இரவு ஒன்பது மணி ஆகி விட்டது. பாங்காக்கில் 'வீசா ஆன் அரைவல்' கவுன்ட்டரில் பணத்தைச் செலுத்தி, வீசா பெற்றுக்கொண்டு, இமிக்ரேஷன் முடித்துக்கொண்டு, பாகேஜ் இருக்குமிடம் போனால், எல்லாப் பயணிகளும் போய் விட்டிருந்தார்கள். பெட்டி மட்டும் டிராலியில் தனியே சோகமாக நிற்க, அருகே ஓர் அதிகாரி காவலுக்கு நின்று கொண்டிருந்தார்.

அடையாள எண்ணைக் காட்டியதும் உடனே டிராலியை நம்மிடம் தந்துவிட்டுப் புன்னகையுடன் போனார் அதிகாரி. அப்பாடா!

விமான கூடத்திலேயே டூரிஸம் டிபார்ட்மெண்ட்.

மறுநாள் பார்க்க வேண்டிய

## சாருகேசி



• தங்கபுத்தர் கோயில்

மணிக்கே கைடு காரும் கையுமாக வந்து 'லாபி'யிலிருந்து அழைப்பு விடுத்தார்.

"முதலில் கனால் டூர். அப்புறம் கோல்டன் புத்தா டெம்பிள். வழியில் அரசரின் அரண்மனை. அப்புறம் பார்லிமெண்ட் மாளிகை..." என்றார் மிகக் குறைவான ஆங்கிலத்தில்.

சுமார் 30 பேர் அமரக் கூடிய படகு. அத்தனை பேரும் அயல்நாட்டு-குறிப்பாக அமெரிக்க- சுற்றுலாப் பயணிகள். இரண்டு மூன்று இந்தியப் பயணிகள். டெலிகாம் இஞ்சினீயர்கள். இந்தோனேஷியாவிடமிருந்து சமீபத்தில் சுதந்தரம் பெற்ற கிழக்கு தைமூர் நாட்டில் டெலிகம்யூனிகேஷன் வசதிகளைச் செய்து கொடுக்க வந்திருந்தார்களாம். சுவாமிநாதன் என்ற சென்னைக்காரர் அங்கே வேலையை முடித்துவிட்டு, பாலி எல்லாம் பார்த்து விட்டு பாங்காக் வழியாக மறுநாள் தில்லி போவதாகச் சொன்னார். இந்தோனேஷியப் படைகள் அங்கேயிருந்து போகும்போது முற்ற முழுக்கத் தொலைத் தொடர்பு வசதிகளை எல்லாம் துண்டித்துப் பாழாக்கிவிட்டுப் போனதாகவும், ஐ.நா.வின் ஆதரவில் தாங்கள் அவற்றைச் சரி செய்து கொடுக்க வந்ததாகவும் சொன்னார்.

10

படகில் ஒரு பெண்தான் கைடு. ஒவ்வொரு இடமாகக் கரையில் இருக்கும் புத்த விகாரங்களையும், வீடுகளையும் பற்றிச் சொல்லிக் கொண்டு வந்தவர், "அதோ தெரிகிறதே, அது தான் என் வீடு!" என்று காண்பித்தார். "வாரத்தில் ஏழு நாளும் நான் இந்த கைடு பணியில் படகில் சுற்றினால் தான் வருமானம்!" என்றார். இடையிடையே நகைச்சுவை வேறு!

பாம்புப் பண்ணை விசிட் ஒன்றும், கைவினைப் பொருள்கள் விற்கும் கடையில் ஷாப்பிங்கும் இந்தப் படகுப் பயணத்திலே உண்டு. பாங்காக்கின் 'பாட்'டுக்கும், நமது ரூபாய்க்குமிடையே டாலரில் பெரிய வேறுபாடு இல்லை. எனவே ஒவ்வொரு பொருளின் விலைச் சீட்டையும் பார்த்து மனத்தால் பெருக்கி ரூபாய் எத்தனை என்று எண்ணிப் பெருமூச்சுவிடும் சந்தர்ப்பங்கள் இருக்கவில்லை!

பன்னிரண்டு மணிக்கு தங்க புத்தர்

# பாங்காக் அற்புதங்கள்!

கோயிலுக்குப் போன போது அமைதியாக இருந்தது இடம். சுற்றுலாப் பயணிகள்கூட அதிர்ந்து பேசுவதில்லை.

"வணங்கிவிட்டு தியானம் செய்யுங்கள்!" என்றார் கைடு. (செய்யாவிட்டால் அடுத்த இடம் கிடையாது என்பது போல இருந்தது!)

பளபளப்பு, சுத்தம், பிராகாரங்களில் விதவிதமான புத்தர் சிலைகள்.

வருகிற வழியிலேயே



• பாங்காக் - படகு வீடு

அரசரின் அரண்மனையை ஒரு ரவுண்டு அடித்துவிட்டு, அதன் முகப்பைக் காட்டினார் கைடு. உள்ளே அழைத்துக் கொண்டு போய் ராஜாவையும், ராணியையும் அறிமுகப்படுத்தப் போகிறாராக்கும் என்று பார்த்தால், காரை விர்ரென்று ஓட்டிக் கொண்டு போய் விட்டார்!

''அரண்மனையைக் காட்டவில்லையே?''

"அங்கே அரசரும் அரசியாரும் இருக்கிறார்களே! அதனால்தான் வெளியே இருந்து அரண்மனை வளாகத்தைக் காட்டினேன்!" என்றார் கைடு.

நாடாளுமன்ற மாளிகையையும், அதற்கு முன்பு இருந்த அழகான சிறு மண்டபத்தையும் சுட்டிக் காட்டி, "இங்கேதான் பதவி ஏற்பு வைபவம் நடக்கும். மண்டபத்தில் அரசரும் அரசியாரும் உட்கார்ந்திருப்பார்கள்!" என்றார் (ராஜா-ராணியை அப்போது பார்த்துக்கொள்ளலாம்!)

வரும் வழியிலேயே மிகப் பெரிய நகைத் தொழிற்சாலைக்குள் அழைத்துப் போய் ஒவ்வொரு ஆபரண செக்ஷனையும் காண்பிக்கிறார்கள்.

வாங்குகிறோமோ இல்லையோ, முதலில் குளிர்ச்சியாக ஒரு கண்ணாடி தம்ளரில் சுத்தமான ஆரஞ்சு ஜூஸ் கொடுத்து உபசரிக்கிறார்கள்!

மாலை எப்படியோ மாரியம்மன் கோயிலைக் கண்டுபிடித்தோம், சைலோம் என்ற பகுதியில். தொண்ணூறு வருடங்களுக்கு மேலாக இருந்து வரும் கோயில் என்றார் பூசாரி. சிதம்பரத்திலிருந்து வந்திருக்கிறார். இரண்டு வருடங்கள் ஆகிறதாம் அவர் இங்கே வந்து.

எல்லா இடங்களையும் போலவே இங்கும் அப்படி ஒரு சுத்தம். ஸ்பீக்கரில் தமிழ்ப் பாடல்கள். வெளியே பூக்கடைகள். கொஞ்சம் தமிழ்நாட்டுச் சூழல்!

ஆனால் பக்தர்கள் என்னவோ உள்ளூர் தாய்லாந்துவாசிகள்தாம் அதிகம்! இந்தியர்கள்-வட இந்தியர்கள்-கொஞ்சம் பேர்.

நெற்றியில் பூசாரியே விபூதி-குங்குமம் இட்டு, சிறிய அழகான மாலையுடன் விபூதி குங்குமப் பொட்டலத்தைத் தந்து விடுகிறார். அதனால் மூலை முடுக்குகளில் விபூதி குங்குமச் சிதறல்கள் கிடையாது!

கோயிலைத் தேடி வந்த முக்கிய காரணம், பக்கத்திலேயே சென்னை கிச்சன் என்ற தென்னிந்திய சைவ உணவு விடுதி இருந்ததுதான். 90 பாட்டுக்கு சாம்பார் சாதம், ரசம் சாதம், தயிர் சாதம் கறி, கூட்டு என்று தேவாமிருதமாக டின்னர். சென்னைக்கார அம்மாள்தான் நடத்துகிறார். மூத்த பெண் திருமணமாகி அமெரிக்கா போய்விட்டாராம். இரண்டாவது பெண் எம்.பி.ஏ. படித்துக் கொண்டு, தமக்கு ஓட்டலில் உதவியாக இருக்கிறார் என்றார்.

தமிழ்ப் பத்திரிகைகள் தவிர, இந்திய தினசரிகளின் இன்டர்நெட் எடிஷன்களின் பிரின்ட் அவுட்டையும் இங்கே படிக்கலாம்!

நான் சென்றபோது இங்கே பொதுத் தேர்தல் பிரசாரம் நடந்துகொண்டிருந்தது. ஆனால் கட்சித் தலைவர்களின் பெரிய புகைப்படங்களை முக்கியமான இடங்களில் வைத்திருந்தார்களே தவிர, சுவர்களையும் தெருக்களையும் நாசமாக்கும் போஸ்டர்கள் ஒன்று கூட இல்லை!

அடுத்த நாள் காலை இந்தியன் ஏர்லைன்ஸ் அலுவலகத்தில் மறுநாள் பயண டிக்கட்டை ரீ-கன்ஃபர்ம் செய்துகொண்டு, அருகிலிருந்த சுற்றுலாப் பயண ஏஜெண்டு ஒருவரின் அலுவலகத்துக்குப் போனபோது, "சுற்றுலாப் பயண பஸ்களும், வேன்களும்

''உன் காதலி உன்னை ஏமாத்திட்டாளா, எப்படி?''

''அவ கல்யாணத்துக்கு என்னைக் கூப்பிடவே இல்லை!''

— வந்தவாசி
பா. ஜெயக்குமார்



''தினமும் நம்ம தலைவர் ஜிம்முக்கு போறாரே... என்ன விஷயம்?''

''வர்ற தேர்தல்ல... தன்னோட பலத்தைக் காட்டத்தான்...!''

— எம். அருள்மூர்த்தி



காலை ஏழு மணிக்கே புறப்பட்டுப் போய் விட்டன'' என்றார். ''கவலைப்பட வேண்டாம். தனியார் கார் ஏற்பாடு செய்யலாம். அவரே உங்களைக் கூட்டிக் கொண்டு போவார்!'' என்று மாற்று ஏற்பாடும் செய்தார்.

அரசு கைடுகூட, கையில் செல்ஃபோன் வைத்திருக்கிறார். நாம் வழியில் பயணத் திட்டத்தை மாற்றி, வேறு இடத்துக்கு அழைத்துச் செல்லக் கோரினால், அதற்கான பயணக் கட்டணத்தைச் சொல்லுகிறார். நாம் பேரம் பேசினால், உடனே நம் தொகை என்ன என்பதை டூரிஸ அதிகாரிகளிடம் சொல்லி, அனுமதி பெற்றுக்கொண்டு, ரசீது எழுதிக் கொடுத்து, உடனே அந்த இடத்துக்கு அழைத்துச் சென்றுவிடுகிறார்! அதிகாரப் பரவலாக்கும் முறைக்கு இதைவிடச் சிறந்த உதாரணம் தேவை இல்லை.

க்வாய் ரிவர் பிரிட்ஜ் பார்ப்பதா, பட்டாயா தீவு போய் வருவதா என்று யோசித்து, பிறகு, ரோஸ் கார்டன் போய் வருவது என்று முடிவாயிற்று.

பறவைகள் பேசுகிற, சொன்னபடி கேட்கிற ஷோ. டால்ஃபின் விளையாட்டுக்கள்; யானை சர்க்கஸ்; தமாஷான கௌபாய்ப்பட ரக மைதான-நாடகம். தாய்லாந்து நாட்டுக் கல்யாணம், நடனம், மார்ஷியல் ஆர்ட் என்று ஒரு நாள் போனதே தெரியவில்லை.

முடிந்தபின் வன விலங்குகள் சரணாலயத்துக்கு அழைத்துச் செல்லுகிறார்கள். காருக்குள்ளேயே உட்கார்ந்திருக்க வேண்டியதுதான். சிங்கங்களும், புலிகளும், நீர் யானைகளும் அவற்றின் இயல்பான சூழல்களில் விடப்பட்டிருக்கின்றன!

இத்தனை இடங்களிலும் சைனா போலவே, ஆயிரக்கணக்கான டூரிஸ்ட்டுகள்! ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் டிக்கட்டுகள். விடுமுறை நாள் அல்லாத அன்றைக்கே, சுமார் 6000 பயணிகள் வந்து குவிந்திருந்தார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.

இந்தக் கட்டுரைத் தொடரை முடிக்கிறபோது எனக்குள் எழுகிற எண்ணங்கள் சில சிந்தனைகளைத் தூண்டின:

சோவியத் ரஷ்யாவில் கம்யூனிச கோட்பாடுகள் தோல்வியுற்றபோது, சீனாவில் மட்டும் கம்யூனிசம் வெற்றி அடைந்தது எப்படி என்ற கேள்வி எழுகிறது. சில பழைமையான சித்தாந்தங்களைக் கைவிட்டு, வளர்ச்சிப் பொருளாதாரத்துக்கு வளைந்து கொடுத்ததுதான் சீனாவின் இத்தனை பெரிய வெற்றிக்குக் காரணமாக இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. நம்முடைய தோல்விகளுக்கெல்லாம் காரணம் அபரிமிதமான மக்கள் தொகை என்று சொல்லி வந்தோம். ஆனால் நம்மைவிட அதிக ஜனத்தொகை மிகுந்த சீனாவுக்கு அது பொருந்தவில்லையே? தொன்றுதொட்டு இருந்து வந்த கம்யூனிச ஆட்சியில் கடைபிடிக்கப்பட்ட கட்டுப்பாடு, அந்த மக்களிடமிருந்து முற்றிலும் விடைபெறவில்லை என்று புரிந்தது. அந்தக் கட்டுப்பாட்டோடு, அவர்களுடைய அசாத்தியமான உழைப்பும், 'என் தேசம்' என்ற பெருமித உணர்வும் அவர்களை இந்த அளவுக்கு விசுவரூபம் எடுத்து நிற்கவும், இன்றைக்கு வளரும் நாடுகளை எல்லாம் சீனாவோடு ஒப்பிட்டுப் பேசவும் வைத்திருக்கின்றன என்பது மறுக்க முடியாத உண்மை.

முற்றும்

# சமயக் களஞ்சியம்

**சமய, இலக்கிய 1000 வினா விடைகளின் தொகுப்பு ரூ. 40**

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் அவர்களின் அருளாணைப்படி தொகுத்து வெளியிடப்பெற்றது.**

இந்து சமயம் தொன்மையும் மேன்மையும் வாய்ந்த சமயமாகும். நம் முன்னோர்கள் அருளிச் செய்துள்ள நம் சமயச் செய்திகள் ஏராளமாகவுள்ளன. அவற்றை உணர்ந்தோமானால் நம் உள்ளத்திற்கு அமைதியும் சமயத் தெளிவும் கிட்டும்.

தற்கால உலகம் மிக வேகமானது. எதையும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தால் தான் - எளிமைப்படுத்தித் தந்தால் தான் ஏற்றுக் கொள்ளும் இயல்பு வேகமாகப் பரவி வருகிறது.

ஆதலின் இந்து சமயம் மற்றும் இலக்கியம் தொடர்பான செய்திகளை எளிய முறையில் எல்லோரும் படித்துத் தெரிந்து கொள்ளத் தக்க வகையில் வினா விடை வடிவில் தொகுத்து நூலாகத் தர வேண்டும் என்னும் எண்ணம் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்களின் திருவுள்ளத்தில் எழுந்ததன் பயனே இந்நூல்.

இந்நூல் சைவம், வைணவம் பற்றிய பற்பல செய்திகள், தெய்வப்படிமங்கள், தத்துவங்கள், அருள் நூல்கள், வழிபாட்டு வகைகள், ஆலய அமைப்பு முறைகள், அம்முறையில் அமைந்துள்ள ஆலயங்கள் முதலிய இந்து சமயத் தொடர்பான அனைத்துச் செய்திகளையும் பெற்றுள்ளது. இச்செய்திகளை உணரின் சமயத் தெளிவு கிட்டும் என்பது திண்ணம்.

**ஸ்ரீ சங்கர மடத்து ஆஸ்தானத் தமிழ்ப் புலவர், '' செஞ்சொல்மணி ''**
**புலவர் பு.மா. ஜயசெந்தில்நாதன் எம்.ஏ.,**
**அவர்கள் மிகவும் முயன்று சேகரித்து, எளிய நடையில் ஆயிரம் வினா-விடை வடிவில்அழகுற தொகுத்துத் தந்துள்ள அருமையான நூல்.**



**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள்** அவர்கள் வழங்கியுள்ள ஆசியுரையில் சில பகுதிகள்...

ஒரு மனிதன், தன் வாழ்நாளில் வேறு வேலையில்லாமல் முழு நேரத்தையும் செலவிட்டு இந்து சமயத்தை அறிந்து கொள்ள வேண்டுமென்றாலும் கூட, அப்போதும் ஒரு பகுதியைத்தான் அறிந்து கொள்ள முடியும்.

நம்முடைய புராணங்களிலும், தத்துவ உபதேசங்கள் கேள்வி - பதில் மூல மாகவே சொல்லப்பட்டிருக்கின்றன. ஆதி சங்கரரும், கேள்வி பதில் என்ற தலைப்பி லேயே 'பிரச்னோத்ர மாலிகா' என்று எழுதியுள்ளார்.

இந்த வகையில், இந்து சமயத்தின் பல்வேறு விஷயங்களைச் 'சமயக் களஞ்சியம்' என்னும் தலைப்பில் நம் ஸ்ரீ மடத்து ஆஸ்தானத் தமிழ்ப் புலவர் பு.மா.ஜயசெந்தில்நாதன் தொகுத்து எழுதி யுள்ள நூல் அருமையான ஆயிரம் செய்திகளைக் கொண்டுள்ளது.

அன்றாட வாழ்க்கையில் அமையக் கூடிய செய்திகளிலிருந்து ஆன்மீக வாழ்க் கையில் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகள் வரை கேள்வி - பதில் ரூபமாக இந்நூலில் தரப்பட்டிருப்பது மிகவும் உபயோகமாக உள்ளது.

**தபாலில் பெற,** கடிதம் எழுதுக. நூலினை உடனே V.P.P. யில் அனுப்புகிறோம். தபால் மற்றும் கட்டுச்செலவு சேர்த்து **ரூ.49** மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெறுக. முகவரி : வர்த்தமானன் பதிப்பகம், ஏ. ஆர். ஆர். வளாகம், 141,வடக்கு உஸ்மான் சாலை, தியாகராயநகர், சென்னை 17. ( பனகல் பார்க் அருகில்) ✆ : 8257995 • **நேரில் பெற,** ரூ.40 செலுத்தி நூலினை உடனே பெற்றுக் கொள்ளலாம். **நேரம் : காலை 9.30 முதல் இரவு 7.30 வரை.** (உணவு இடைவேளையின்றி). ஞாயிறு விடுமுறை.

# முடிவுக்கு வந்தது 'முல்லை'யின் ஆதிக்கம்!



தி.மு.க.வில் முல்லை வேந்தன் வளர்ச்சி அபாரம்! பச்சை குத்திக் கொண்டு எம்.ஜி.ஆர் மீதுள்ள பாசத்தை வெளிப்படுத்தியவர் முல்லை. தர்மபுரி பகுதியில் பரவலாக இருக்கும் வன்னியர் ஆதிக்கத் துக்கு எதிராக தலைமையில் இருக்கும் சிலரால் கொம்பு சீவி வளர்க்கப்பட்டவர்தான் இந்த முந்நாள் ஆசிரியர். தர்மபுரியில் சிறிய அச்சகம் ஒன்றை நடத்திக் கொண்டு மாவட்ட அரசியல் செய்து கொண்டிருந்த முல்லை 1980ல் நாஞ்சில் மனோகரன் கட்சிக் குள் மீண்டும் நுழைந்தபோது உடன் வந்தவர். எந்தப் பின் பலமும் இல்லாத இவருக்கு 1996ல் கலைஞர் அமைச்சர் பதவி கொடுத்ததற்கு முக்கியக் காரணம், ஜாதி ரீதியாக அனைத்து பிரிவினரையும் திருப்திப்படுத்த வேண்டும் என்பதுதான். இந்த ஐந்து வருட காலத்தில், இவரைப் போன்ற அமைச்சர்களை இனம் கண்டு கொண்டு, கலைஞர் களையெடுத்திருப்பாரே யானால், கழக அரசின் செயல்பாடுகள் இன்னமும் பாராட்டுப் பெற்றிருக்கும். இப்போதோ தேர்தல் நெருங்குவதால் நடுநிலையாளர் இமேஜ் வேண்டி நட வடிக்கை எடுத்தார் என்ற விமர்சனம் எழும்.

மூணுக்கென்றால் முல்லைக்குக் கோபம் வந்துவிடும். இப்படித்தான் இரண்டு வருடங்களுக்கு முன்னர் ஓர் இளைஞர் இவரைப் பொதுக்கூட்டத்தில் ஏதோ கேள்வி கேட்டார் என்பதற்காக மேடையிலிருந்து இறங்கி கை நீட்டி விட்டார். அப்போதாவது இவரைத் தலைமை கண்டித்ததா? இல்லையே! எனவே கூடுதல் துணிச்சல் பெற்றவராக கடந்த நவம்பர் மாதம், ஒரு பொதுக் கூட்டத்தில், ஓரமாக நின்று கண்டனக் குரல்கள் எழுப்பிய மாவட்ட அ.தி.மு.க மகளிர் அணிச் செயலாளர் காவிரி மீது பாய்ந்து விட்டார். அப்போதாவது தலைமை இவரைக் கண்டித்ததா...? இல்லையே! இதன் பின் மிகவும் உற்சாக மாகிவிட்ட முல்லையின் உச்சக்கட்டப் பாய்ச்சல்தான் அறநிலையத்துறை உதவி ஆணையாளர் அன்புமணியின் மீது நடந்த தாக்குதல்.

உட்கட்சித் தேர்தலின் போது, மு. ராஜேந்திரன் தலைமையின் கீழ் போட்டியிட்ட அணியின் ஆதரவாளர்களை, வோட்டுப் போட விடாமல், முல்லை விரட்டியடித்தார். இந்த முயற்சியில் 'இளைய தலைவர்' ஆதரவு முல்லைக்கு அமோகமாய் இருந்தது.

இதெல்லாம் போகட்டும்; கொடுத்த துறையிலாவது ஏதேனும் சாதனை செய் தாரா என்றால், அதிலும் ஜீரோ. எதைக் கேட்டாலும் 'என்கிட்ட அதிகாரம் இல் லீங்க... முதல்வர் செயலர் ராஜமாணிக்கம் தான் இந்தத் துறையைக் கவனிக்கிறார்' என்று தள்ளிவிட்ட போக்கு.

ஏற்கெனவே தர்மபுரி மாவட்டத்தில் பா.ம.க மிகவும் பலமாக இருக்கிறது. அ.தி.மு.க அணியில் இருக்கும் பா.ம.க வைக் களத்தில் சந்திக்க, தி.மு.க அணிக்கு வலிமையான தளபதிகள் தேவை. இந்த ஐந்து வருட காலத்தில் அப்படிப்பட்ட தளபதிகளை முல்லைவேந்தன் உதவி யுடன் உருவாக்காமல் விட்டுவிட்டது தி.மு.க.வுக்குப் பலவீனம்தான்.

— சஞ்சயன்



அனைத்துலக மகளிர் தினமெல்லாம் ஜோரா கொண்டாடியிருப்பீங்களே..? தாய்க்குலத்துப் பிரதிநிதிகளை வீட்டுக்குக் கூப்பிட்டு 'விமன்ஸ் பில்' சம்பந்தமா சீக்கிரம் கூடிப் பேசலாம்னு வாஜ்பாய் ஈஸியாச் சொல்லிட்டார். இந்தியால லேடீஸ்"க்கு வீட்டுலயே இன்னும் சொந்த இடம் இல்லே... ஐ மீன் எமோஷனல் அண்ட் இன்டலெக்சுவல் ஸ்பேஸ்! இதுக்கே லாட்டரியடிக்கும்போது பொலிடிகல் ஸ்பேஸை வைச்சுக்கிட்டு என்ன பண்ணுவாங்க? சும்மா ஐ வாஷ்தான் - லாலுவுக்குப் பதிலா ராப்ரி சி.எம்.மா இருக்கிற மாதிரி எல்லா லெவல்லயும் பெண்கள் ஆண்களுக்கு பினாமியா செயல்பட்டுக்கிட்டிருப்பாங்க! (பை தி வே, லாலு - ராப்ரியோட சத்புத்திரன் தேஜ் பிரதாப், 'யுவ சாம்ராட்'ங்கற பட்டத்தோட பீஹார் பாலிடிக்ஸ்ல என்டர் ஆகியிருக்காராம்!)

சுமி இப்படி ஆன்டி பெண்களா இருக்க வேண்டாம்னு நிறைய ரீடர்ஸ் (பெண் வாசகிகள்தான்!) நினைக்கக்கூடும். சம வாய்ப்பு வேற சலுகை வேற.. தாய்க்குலம் சம வாய்ப்புக்குத்தான் முயற்சி செய்யணும்; போராடணும் - நாட் ஃபார் ரிசர்வேஷன்றது என்னோட பாலிஸி.

ஈக்வல் வாய்ப்பு கிடைச்சவங்க அதைப் பயன்படுத்திக்கறாங்களான்ற கேள்வியும் வருது. ப்ரியங்கா சோப்ரா, பியூட்டி கான்டஸ்டுல கேள்வி கேட்டப்போ மதர் தெரஸா காலமாயிட்டாங்கன்றதைக் கூட தெரிஞ்சுக்காம பதில் சொல்லியிருந்தாங்க.

பாவம்! இதனால் மாஜி மிஸ் யூனிவர்ஸ் சுஷ்மிதா சென் வேற செமையா மாட்டிக்கிட்டாங்க. ரீசன்டா மெட்ராஸ்ல இரண்டு ஹோட்டல் இனாகரேட் பண்ண வந்த 'சுஷ்' கிட்டே ப்ரியங்காவோட இந்த அபத்தமான பதில் பத்தி ரிப்போர்டர்ஸ் கேட்கப்போக, "உயிருடன் இல்லாவிட்டாலும் என்னைக் கவர்ந்தவர்னு சொல்லிருக்கணும். டென்ஷன்ல தப்பாய்ச் சொல்லிட்டா. போகுது விடுங்க. பதினெட்டு வயசு சின்னப் பெண் தானே!"ன்னு சொல்லி சமாளிச்சு... இதைத்தான் **அழகான** எஸ்கேப்ன்றது!

இயற்கையா இருக்கறதை விட்டுட்டு செயற்கையா அழகு செஞ்சுக்கறதுதான் பியூட்டியா? அப்படியானா அது எப்படி நிஜ அழகா இருக்க முடியும்... - இந்த பிலசாபிகல் கொஸ்சன்ஸ் எல்லாம் ஒரு பக்கம் இருக்கட்டும். சுஷ் மாதிரியோ ப்ரியங்கா மாதிரியோ எப்பவும் இருக்கறதுக்கு என்ன செலவாகும்னு நம்ம மாதிரி மிடில் கிளாஸ்காரங்க யோசிச்சா மயக்கம் வரும்! ('ஞாபகப்படுத்தாதே சுமி!'ன்னு மன்றத்து ஆண் உறுப்பினர்கள் பர்ஸைத் தடவிப் பார்க்கறது புரியுது)



• ப்ரியங்கா சோப்ரா



• சுஷ்மிதா சென்

எப்பவுமே அன்னாச்சுரலா இருக்கறதுக்குத்தான் அதிகம் செலவு செய்ய வேண்டியிருக்கு! ஒரு பிரமாதமான உதாரணம் பாருங்க : 'கார்பெட் நேஷனல் பார்க்'ன்ற சரணாலயத்துல யாரோ கொடூரன்கள் வீரப்பனுக்குப் போட்டியா யானைகளைக் கொன்று குவிச்சிருக்காங்க! விசாரிச்சா வனத் துறை அதிகாரிங்க 'காவல் பத்தாது; அதைப் பலப்படுத்த பணமில்லே'ன்னு பதில் சொல்றாங்

கலைஞர் 77

கலைமாமணி யோகாவின்

புகைப்படத் தொகுப்பும் வண்ணப்பட பதிப்பும்




களாம். யானைகளை ஜூவில் வைச்சுப் பராமரிக்க ஆகற செலவு என்ன தெரியுமா..? இயற்கைச் சூழல்ல அதுகளைப் பாதுகாக்க ஆகக் கூடிய செலவைப் போல பதினாறு மடங்கு!

ஜூக்களுக்குச் செலவழிக்கறதுக்குப் பதிலா சரணாலயங்களுக்குச் செலவழிக்கலா மேன்னு 'பிராணிநல அமைப்பு' ஒன்று கொடி பிடிக்குது.

'அப்புறம் ஸ்கூல் பசங்க எங்க போய் யானையைப் பார்ப்பாங்களாம். வெறும் 'டெக்ஸ்ட் புக்லயா?'ன்னு கேட்காதீங்க! எல்லாரும் கிட்டே இருக்கற சரணாலயத் துக்கு எக்ஸ்கர்ஷன் போகலா

# கா(ல)த்து நெல்லிக்கனி இரண்டு!

மேன்னு பதில் வரும்.

சரணாலயம்னதும் ஒரு விஷயம் ஞாபகம் வருது. ஃபோட்டோகிராபர் யோகா ஆரம் பத்துல வைல்ட் லைஃப் ஃபோட்டோ கிராஃ பராத்தான் இருந்தார்ன்றது ரொம்ப பேருக் குத் தெரியாது. இன்னிக்கு அவர் ரொம்ப பேசப்படறவராயிட்டார் - கலைஞர் 77 புக் மூலமா. புக் ரிலீஸ்ல மேடை நிறைய பேச்சாளர்கள்! டூ அண்ட் அ ஹாஃப் அவர்ஸ் பேச்சு! பல மீட்ஸ்ல சி.எம்.மோட போட் டோஸ் கலெக்ஷன் யோகாகிட்டே இருக்கு-

லாஸ்ட் இயர் எக்ஸிபிஷனா போட்ட அதையெல்லாம் இந்த இயர் புக்கா போட்டு ரிலீஸ் பண்ணிருக்கார். ஃபங்க்ஷன்ல பேசினவங்கள்ல அனேகமா எல்லாருமே கலைஞரை வாழ்த்த ஒரு சந்தர்ப்பமா அதை மாத்திக்கிட்டாங்க. அஃப்கோர்ஸ் யோகா வுக்கும் நிறைய பாராட்டு! தன்னோட புக்லே ருந்து எந்தப் படத்தையும் முன் அனுமதி இல்லாமலே 'கலைஞரின் பெருமைக்கு உகந்த வகையில்' யூஸ் பண்ணிக்கலாம்னு பிளாங் கெட் பெர்மிஷன் கொடுத்திருக்கார் யோகா. படம் எடுத்தவர் பேர் போட்டா நல்லாயிருக் கும்னு சின்னதா ரிக்வெஸ்ட் பண்ணியிருக் கார். எல்லாத்தையும்விட அதிக பாராட்டுக்கு உரியது இந்தப் பெருந்தன்மைன்னு நான் நினைக்கறேன்.



• தி.க.சி.

இன்னொரு பாராட்டு விழா. இது சாஹித்ய அகாதமி பரிசு வாங்கின தி.க.சிக்கு. இந்த விழாவில எதிர்பார்த்தபடியே தி.க.சி. தேர்வை எதிர்த்தவங் களுக்கு எதிர்ப்பு இருந்தது. ஆனா எல்லாத்துக்கும் நடு வுல ரொம்ப கௌரவமா, கண்ணியமா எக்ஸைட் ஆகாம உட்கார்ந் திருந்தார் பெரியவர். திருப்பூர் கிருஷ்ணன் பேசும்போது எல்லாரையும் அமைதிப்படுத்தற மாதிரி ஒரு விஷயம் சொன்னார். நா.பா.வும் கிருஷ்ணனும் தி.க.சியை ஒரு முறை பார்த் துட்டுத் திரும்பி வரும்போது நா.பா. சொன் னாராம் : "என்கிட்டே மட்டும் இரண்டு நெல் லிக்கனி இருந்தா, அதிய மான் ஔவைக்குக் கொடுத்த மாதிரி அதை தி.க.சி.க்கும் வல்லிக் கண்ண னுக்கும் கொடுப்பேன்."

'இத்தனை தமிழ் எழுத்தாளர்கள் இருக் கறச்சே ஏன் இந்த இரண்டு பேருக்கு மட் டும்...? எல்லாரும் நல்லாயிருக்க வேண்டா மா'ன்னு கேட்டிருக்கார் கிருஷ்ணன்.

'இந்த இரண்டு பேரும் நல்ல எழுத்தை மனசுவிட்டுப் பாராட்டிக் கடிதம் போட யோசிக்க மாட்டாங்க... அதனால அவங்க நல்லாயிருந்தா தமிழ் எழுத்தாளர்கள் எல்லா ருமே நல்லாயிருப்பாங்க'ன்னு சொன்னாராம் நா.பா! சாஹித்ய அகடமியை நா.பா. முந்திக்கிட்டார் பாருங்க.

- சுமி.



**சை**க்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்திவிட்டு, சாப்பாட்டுக் கூடையை எடுத்துக் கொண்டு, மாடி ஏறினான்.

திவ்யா, டீவியில் இருந்தாள். கடிகாரம் 9.30 காட்டியது.

சட்டையைக் கழற்றி, ஆணியில் மாட்டிவிட்டு, கைகால் கழுவி சாப்பிட உட்கார்ந்தான்.

திவ்யா, சாப்பாட்டுத் தட்டை வைப்பதிலேயே அவளது 'கோபம்' தெரிந்தது. மௌனம் வீங்கிக் கொண்டே போனது. ராஜுவும் பேச்சை ஆரம்பிக்கவில்லை.

சாப்பிட்டு எழுந்ததும், தானும் சாப்பிட்டு, சமையல் மேடையை அலம்பிவிட்டு, ஹாலுக்கு வந்தாள்.

"ஏன் லேட்?"

"சினிமாவுக்குப் போனேன், திவ்யா."

"நமக்குக் கல்யாணம் ஆகி, எத்தனை மாசம் ஆச்சு?"

"எட்டு."

"யாராவது எட்டு மாதத்திற்குள் பெண்டாட்டி இல்லாம சினிமா போவாங்களா?"

ஆர். வசந்தகுமார்

"ராஜேந்திரனும், கோபியும் ரொம்ப வற்புறுத்தினாங்கம்மா!"

"பெண்டாட்டியை விட நண்பர்கள் உசத்தியா?"

இந்தக் கேள்விக்கு ராஜு சற்று மௌனித்தான்.

"சொல்லுங்க".... குரலை உயர்த்தினாள்.

"திவ்யா, என் நிலைமையைப் புரிஞ்சுக்கோ. இன்னிக்கு ராஜேந்திரனுடைய கல்யாண நாள். கொண்டாடினோம். தவிர, உன்னை விட்டுட்டு தனியா போகணும் என்பது, என் நோக்கமில்லை. சினிமா இடையிலேயே உன்னைத் தனியா விட்டுட்டு வந்துட்டமேன்னு ரொம்ப ஃபீல் பண்ணினேன் தெரியுமா?" கெஞ்சலாகச் சொன்னான்.

"பொய்."

"சத்தியமா திவ்யா. எனக்குப் பொய் பேசப் பிடிக்காது..."

"அதாவது மத்தவங்க. ஆனா, உங்களுக்கு அந்தப் பொய் பேசும் உரிமை உண்டு இல்லை?"

"திவ்யா, இது சின்ன மேட்டர். இதப் போய் பெரிசா..."

"சின்னதா, பெரிசான்னு தீர்மானிக்க வேண்டியது, நான்."



# பெண்ணின் உள்ளம் புதிர் (அல்லது) பாவம், இந்த ஆம்பளைங்க!

ராஜுவுக்கு கோபம் வந்தது. அடக்கிக் கொண்டான்.

"என் புருஷன், என்கிட்டே எதையும் மறைக்க கூடாதுன்னு நினைக்கிறவ நான்."

''ஸாரிடா, தவிர்க்க முடியாம போயிடுச்சும்மா...''

"சும்மா சாக்கு போக்கு சொல்ல வேண்டாம்.''

மறுபடியும் அம்பு.

"திவ்யா, ஒரு புருஷனுக்குச் சினிமாவுக்குப் போறதுக்குக் கூட சுதந்தரம் இல்லையா?''

"நான் ஒன்னு கேட்கட்டுமா?"

"கேளு."

''இதே மாதிரி, சூழ்நிலைன்னு நான் உங்ககிட்டே சொல்லாம சினிமாவுக்குப் போயிருந்தா, ஒத்துக்கிட்டிருப்பீங்களா?"

"திவ்யா, என்னோட சண்டை போடுவது தான் உன்னோட நோக்கமா?"

"நோ. எல்லாத்திலேயும் ஒரு ஒழுங்கை விரும்பறவ நான்..."

ராஜுவின் கண்கள் சிவப்பேறின.

"அப்போ, என்னை ஒழுங்கில்லாதவன்னு சொல்றியா?"

"உங்ககிட்டே, எனக்குப் பிடிக்காததே இதுதான். தப்பைச் சுட்டிக் காட்டும் போது, இவ என்ன சொல்றது, நான் என்ன கேட்கறதுன்னு நினைக்கிற இறுமாப்பு."

"எதுடீ தப்பு?" ராஜுவின் குரல் உயர்ந்தது.

"தப்புதான். என்கிட்ட சொல்லாமல், என்னை விட்டுட்டு சினிமாவுக்குப் போனது தப்புதான்."

"ஆமா. போவேன். என்ன வேணா பண்ணிக்கோ. சே, என்ன வீடு இது? நானும் மத்த ஆம்பிளை மாதிரி பிகேவ் பண்ணியிருக்கணும். மிதந்து வராத சாதமும், அதிர்ந்து வராத ஆம்பிளையும் உருப்படாதுன்னு சொல்வாங்க. உங்களுக்கெல்லாம் ராத்திரி குடிச்சிட்டு வந்து, எட்டி உதைக்கிற ஆம்பிளைதான்டீ லாயக்கு..."

திவ்யா கன்ன கதுப்பில், கண்ணீர் வடிந்தது.

முடியாம, அவஸ்தைப்பட்டு, கணவன் மனசை நோகடிச்சு... ஹாரிபிள்... ஸோ, பொண்ணுங்க மேல தப்பில்லை. வளர்ப்பு அப்படி!"

"வளர்ப்பு பத்தி பேசாதீங்க. நம்ம சண்டையில அவங்க வேண்டாம்..."

"அப்பா, அம்மாவைச் சொன்னா போதும். என்னமா கோபம் வர்றது!"

"எல்லா பொண்ணும் அப்படித்தான்."

ராஜு எழுந்து பாயை உதறிப் போட்டுக் கொண்டு படுத்தான். சற்று நேரம் கழித்து, திவ்யா வந்து படுப்பது தெரிந்தது.

**நா**ட்கள் கரைந்தன. இருவரும் பேசிக் கொள்ளவில்லை. ஊருக்கு வந்த உறவினர்களுடன் திவ்யா பிறந்த வீட்டுக்குப் போனாள்.

ஒருவாரம் கழித்து, திவ்யாவிடமிருந்து கடிதம்.



"நீங்க உதவி மேனேஜராக இருக்கீங்க. உங்களுக்கும் உங்க மேனேஜருக்கும் வேலையில் என்ன வித்தியாசம்?"

"இருக்கே பெரிய வித்தியாசம்! அவர் ஆறு மணி நேரம் தூங்குவார். நான் ஐந்து மணி நேரம் தான் தூங்குவேன்!"

— மங்கை

மனசு படபடவென்று அடித்துக் கொள்ள, "இப்ப ஏன் அழுது தொலைக்கிறே?" என்றான்.

"என் தலையெழுத்தை நினைச்சு அழறேன்."

"தலையெழுத்துன்னு பேசற அளவுக்கு இங்கே என்ன நடந்தது? எதுல குறை வைச்சேன்? என்ன, உங்க மாமா மாதிரி, மாசம் ஒரு புடைவை எடுத்துத் தரலை. உன் பிறந்த நாளுக்குப் பட்டுப் புடைவை எடுத்துத் தரலை.. ஐ நோ. பட், ஒண்ணு மட்டும் நீ மறுக்க முடியாது. நான் பொய், பித்தலாட்டம் செஞ்சு கல்யாணம் பண்ணிக்கலை. என் வருமானம் குறைச்சல்னு சொன்னேன். பத்து தடவை ஆபீசுக்கு வந்து பத்து பேரை விசாரிச்சார் உங்கப்பா. உன்னைச் சொல்லி தப்பில்லை. கல்யாணம் ஆனா போதும்னு முதல்ல எதையாவது சொல்வாங்க. கல்யாணம் ஆனபிறகு, பாவம் அதுங்க வந்து தங்களோட சௌகரியத்தைக் குறைச்சிக்க

'அன்புள்ளவருக்கு... திவ்யா எழுதிக் கொண்டது'....

'இப்போதெல்லாம், பெண்கள் கணவனுக்குக் கடிதம் எழுதும்போதுகூட, வணக்கம் என்று எழுத விரும்புவதில்லை போலும்' என யோசித்துக் கொண்டே மேலே தொடர்ந்தான்.

'நான் அம்மா, அப்பா, தங்கை யமுனா எல்லோரும் திருநெல்வேலி 'டூர்' போனோம். குற்றாலம், மதுரை, கன்னியாகுமரி, நாகர் கோவில், திர்பரப்பு.... செம ஜாலியான டூர்.'

ஒரு தடவை சொல்லாமல், தனியாக சினிமாவுக்குப் போனதற்கே உலுக்கோ உலுக்கு என்று உலுக்கிய திவ்யா, இன்று டூர் போயிட்டு வந்து பெருமையாக எழுதுவதை நினைத்து அவனுக்குச் சிரிப்பதா, அழுவதா என்றே புரியவில்லை.

பெண்கள் - புதிர்கள்.

விடுவிக்க முடியாத புதிர்கள். ○



# மூட்டு வலியா !
# இனி கவலை வேண்டாம்



மூட்டு வலி என்பது மூட்டுக்களில் ஏற்படும் பாதிப்பைக் குறிக்கின்றது. இதனை கீழ்வாயு என்றும் அழைப்பார்கள் வாதம், பித்தம், கபம் போன்றவைகள் கூடுவதாலும், குறைவதாலும் இந்நோய் உண்டாகிறது.

மூட்டு வலி பல வகைப்படும் அவைகள்

**வாதமூட்டு வலி** - வாயுப் பொருட்களை அதிகம் உண்பதால் உண்டாகிறது. வாயுப்பொருட்கள், பயிறு வகைகள்,பருப்பு வகைகள், கிழங்கு வகைகள் முதலியன, **பித்த மூட்டு வலி** - பித்தத்தை அதிகப்படுத்தும் உணவுப் பொருட்களை அதிகம் உண்பதால் உண்டாகிறது. டீ, காபி, மது, காரமான உணவு வகைகள் முதலியன. **கப மூட்டு வலி** : கபகுற்றம் மிகுதியான உணவுப்பொருட்கள் அதிகம் உண்பதால் கப மூட்டு வலி உண்டாகிறது. இனிப்பு பண்டங்கள், தயிர், இறைச்சி, நெய், எண்ணெய் பண்டங்கள் முதலியன. **இதய கீழ் வாயு** - இதயத்தை நோய் கிருமிகள் தாக்குவதால் இதய மூட்டு வலி உண்டாகிறது. இதனால் ஜுரம், முழங்கால் மூட்டுகளில் வீக்கம், வலி, சூடு போன்றன தோன்றும். சோதனை செய்து பார்க்கும் போது இதயத்தில் பாதிப்பு ஏற்பட்டிருக்கும். **மேக கீழ் வாயு** - விலை மாதர் உறவால் நோய் கிருமிகள் உடலில் பரவி மூட்டுக்களில் பாதிக்கின்றது. இதனால் மூட்டுக்களில் சீழ் பிடித்தல், வீக்கம், வலி, குத்தல், குடைச்சல் போன்றன இருக்கும்.

**மூட்டுவலியின் அறிகுறிகள்** : மூட்டுக்களில் வலி, குத்தல், குடைச்சல், வீக்கம், நடக்க இயலாமை, சுரம் போன்றவை காணப்படும். மேலும் எலும்பு தேய்மானம், சீழ்பிடித்தல் போன்றவையும் உண்டாகும்.

**மூட்டுவலிக்கான மூலிகைகள்** : வேப்பிலை, வில்வம், அத்தி, நாவல், அருகம்புல், அரசன், வாத நாரயணன், முடக்கற்றான், கீழாநெல்லி, முருங்கை போன்ற மூலிகைகளை பறித்து வந்து வெயிலில் உலர்த்தி பின் உரலில் போட்டு நன்கு இடித்துத் தூள் செய்து பின் சம அளவில் எல்லாவற்றையும் ஒன்றாக கலந்து ஒரு பாட்டலில் வைத்துக் கொள்ள வேண்டும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு ஒரு மணி நேரம் முன்பாக தினமும் காலை, இரவு ஆகிய இரண்டு வேளையும் உட்கொள்ள வேண்டும். இவ்வாறு சுமார் மூன்று மாதம் செய்து வந்தால் எல்லா ரக மூட்டு வலிகளும் பூரண குணம் கிட்டும். சுமார் பதினைந்து நாட்களில் குணம் தெரிய ஆரம்பிக்கும்.

**எண்ணெய் கலவை** : தேங்காய் எண்ணெய், விளக்கெண்ணெய்,வேப்ப எண்ணெய் ஆகிய மூன்றையும் சம அளவு ஒன்றாக கலந்து (சுமார் வகைக்கு 50 மில்லி) ஒரு பாட்டிலில் கலந்து வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து ஒரு டீஸ்பூன் அளவு உள்ளங்கையில் விட்டு உணவுக்கு ஒரு மணி நேரம் முன்பாக நாவினால் நக்கி சாப்பிட வேண்டும்.

**உணவு முறைகள்** : தினம் காலை அல்லது ஏதேனும் ஒரு வேளை பச்சையாக உட்கொள்ளும் பழங்கள், காய்கள், பழ ஜுஸ்கள், வெஜிடபிள் சாலட், புரூட் சாலட் போன்றவற்றில் ஏதேனும் இரண்டு அல்லது மூன்று வகைகளை தேவையான அளவு உட்கொள்ளவும், உதாரணம் பப்பாளி, மா, அன்னாசி வாழை, பேரிட்சை நாவல், கொய்யா, மாதுளை, சப்போட்டா, தர்பூசணி நொங்கு, இளநீர், பதனீர், தேங்காய், கேரட், வெள்ளை வெள்ளரிக்காய், கோவக்காய், பீர்க்காய் போன்றன உட்கொள்ளலாம். மற்ற இரண்டு நேரம் சாதாரண சமைத்த சைவ உணவுகளை உண்பது நல்லது. இதிலும் ராகி கோதுமை, பார்லி, உளுவல் போன்ற தானியங்கள் அடிக்கடி சேர்த்துக் கொள்வது நல்லது முள்ளங்கி, அவரை, கேரட், பீட்ரூட், வாழைத்தண்டு, கத்தரி முருங்கை போன்றவைகளை பொறியல் அல்லது சூப் செய்து சாப்பிடுவது நல்ல பலன் அளிக்கும்.

**மூட்டுக்களை பாதுகாக்கும் முறைகள்** : எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் மூட்டுக்களில் எண்ணெய் சென்று நன்றாக செயல்படவும், மிருது படவும் செய்கின்றது.

**சத்தான உணவுகள் உண்பது** : மூட்டுக்களை பாதுகாக்கின்றது. மூட்டுக்களில் வீக்கம் ஏற்பட்டால் மூட்டுக்களில் விளக்கெண்ணெய் சிறிது தடவி ஐந்து நிமிடம் கழித்து உப்பை அல்லது அரிசி தவிடு அல்லது கோதுமை தவிட்டை சூடு செய்து பின் இதனை துணியில் முடிந்து ஒற்றடம் கொடுக்கலாம். பின்னர் சுக்கை தூள் செய்து வெந்நீரில் கரைத்து பற்று போட வீக்கம், வலி, குறையும், தினமும் காலை எழுந்தவுடன் இயன்ற அளவு தண்ணீர் குடிக்கவும்.

வாரம் ஒரு நாள் பகல் ஒரு வேளை உணவை தவிர்த்தல் வேண்டும் ஒவ்வொரு வேளையும் முக்கால் வயிறு ஆகாரமாக உட்கொள்ள வேண்டும். புகைத்தல்,மதுவகைகள், குளிர் பானங்கள், காரமான உணவு, டீ, காப்பி போன்றவற்றை தவிர்க்க வேண்டும்.

உடற்பயிற்சி : நடத்தல், உட்கார்ந்து எழுதல், குனிந்து நிமிர்தல் கை, கால் விரல்களை, நீட்டி மடக்குதல் நின்ற இடத்தில் குதித்தல், ஓடுதல், நீந்துதல், மூச்சுப் பயிற்சி, சைக்கிள் ஓட்டுதல் முதலியன மூட்டுக்களை பலம் பெற செய்கின்றன. ஆகவே இதனை தினம் காலை, மாலை, சுமார் 20 நிமிடம் மெதுவாக செய்தல் நல்லது. சூரிய ஒளி தினமும் உடலில் படும்படி 10 நிமிடம் நிற்கவும். மேற்கூறிய முறைகளை பின்பற்றினால் எல்லாரக மூட்டுவலிகளில் இருந்தும் குணம் பெறலாம்.

### தெய்வீக மூலிகை வைத்தியர்கள்



தலைமை முகவரி : **Dr. M.குருபரன் & Dr. M. சபாபதி, Dr. M.சிவசக்தி, S/O. Dr. C.K.மாணிக்கவாசகம்**

**P.B. NO. 30, No. 3, திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் DT 635601 ✆:04179-20469, 22769**

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 600 010. ✆ : 044-6424285, 6427638.

**இரு முகவரிகளிலும் ஆலோசனை நேரம் காலை 10.00-1.00 P.M. மாலை 5.00-7.00 P.M.**

**அறிவிப்பு :** சென்னை,வேலூர், காஞ்சிபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைப்பேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம் - விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**குறிப்பு :** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 27 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய '[illegible] தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ. 70/- க் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய '[illegible] இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ. 60/- தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

**7& 8 ந் தேதி – மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை "The South Indian Concerns Ltd." 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589**

**9 ந் தேதி – பெங்களூர் : காலை 11 to 1 ஹோட்டல் பிராட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பே கவுடா ரோட் ✆ : 2266374**

**18 & 19–ந் தேதி–புதுடெல்லி : காலை 9 to இரவு 8 மணி வரை, South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆:5717126,5723651**

## ரிமோட்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், டாஸ்கானினி என்ற இசை மேதை இத்தாலியில் இருந்தார். ஆர்க்கெஸ்டிரா குழுவில் சாதாரண வயலினிஸ்டாக வாழ்க்கையைத் தொடங்கியவர்; பிரேஸில் நாட்டுக்குச் சென்றபோது, குழுவின் தலைவர் இசை நிகழ்ச்சியை மோசமாகச் செய்ததால் ரசிகர்களால் விரட்டியடிக்கப்படவே, டாஸ்கானினி அவசரத் தலைவரானார். அதன் பின் உலகப் புகழ் பெற்ற சங்கீத மேதையாகிவிட்டார். மேதைகளுக்குக் கோபம் வருவது சகஜம். ஒரு நிகழ்ச்சியின்போது, யாரோ ஒரு நபர் அவரிடம் வந்து இதை இப்படிப் பண்ணணும், அப்படிச் செய்யணும் என்று தொண தொணத்தார். டாஸ்கானினி உடனே, 'God tells me how he wants this music to be played and you get in his way' என்று சீறி விழுந்து விரட்டியடித்துள்ளார்.

நம்ம எஸ்.பி. பாலசுப்பிரமணியம் அப்படியெல்லாம் கோபம் காட்டுகிற நபரல்ல. Perfect gentleman. ஸன் நியூஸின் 'சின்னச் சின்ன ஞாபகங்கள்' நிகழ்ச்சியின்போது, 'நீங்கள் பாடியதை யார் ரொம்ப நன்றாகப் படமெடுத்தார்கள்?' என்று ஒரு சிறுமி கேட்டாள். 'நன்றாக எடுத்தவர்களும் நன்றாகக் கெடுத்தவர்களும் உண்டு' என்றார் எஸ்.பி.பி 'ரொம்ப மென்மையாக, மிருதுவாகப் பாடியிருப்பேன். அதை எங்கோ மலையுச்சியிலிருந்து பாடுவதாகப் படமெடுத்து இரைச்சலாகப் பண்ணியிருப்பார்கள்' என்றாரேயொழிய எவர் பெயரையும் குறிப்பிடவில்லை. யார் மீதும் கோபப்படவில்லை.

சுவாரஸ்யமான இந்தக் கேள்வி பதில் தொடரைப் பெரியவர்களை வைத்தே நடத்தக் கூடாதோ? சிறுவர்களும் சிறுமியர்களும் தங்கள் வயசுக்கும் அனுபவத்துக்கும் மீறி கேள்விகளைக் கேட்கும்போது, சொல்லிக் கொடுத்ததை ஒப்பிக்கிறார்கள் என்ற குட்டு வெளிப்பட்டு விடுகிறது.

சரித்திரம் காணாத சோகம் குஜராத் பூகம்பம். A cruel destruction caused by an unknown whim of Nature' என்று குறிப்பிட்டார் ஒரு கட்டுரையாளர். எனவே இந்த ஆண்டு ஹோலி பண்டிகையைக் கொண்டாடப் போவதில்லை என்று அறிவித்தார் பிரதம மந்திரி. ஸ்டண்ட் அல்ல, மனப்பூர்வமான துயரம்.

ராஜ் செய்தியில் அவரது அறிக்கையைக் கேட்ட கையோடு அடுத்த சேனலைத் திருப்பினால் –

என்ன அநியாயம்! (அல்லது என்ன தற்செயல்!) 'ஹோலி! ஹோலி!' என்று பாடிக்கொண்டு, வண்ணங்களை வாரியிறைத்து, கலர் கலராய்க் கும்மாளமடிக்கிறார்கள் சத்யராஜும் சுகன்யாவும் ரகுமானும். ஆனால் அவர்களைப் பழி சொல்ல முடி





யாது. பல வருடங்களுக்கு முன் வெளி வந்த 'உடன்பிறப்பு' படத்திலிருந்து ஒரு காட்சி அது-

# எஸ்.பி.பிக்குக் கோபம் வராது!

வினோத்

**பு**ரிந்து கொள்ள முடிந்தவர்கள் புரிந்து கொள்ளவும், புரிந்து கொள்ள முடியாதவர்கள் புரிந்து கொள்ள முடிந்தவர்களிடம் கேட்டுப் புரிந்து கொள்ளவும்., புரிந்து கொள்ள முடிந்தவர்கள்... வேண்டாம். புதிருக்கு வரலாம்.

டி.டி. கிரிக்கெட் ஸ்போர்ட்ஸில் காட்டப்பட்ட பயிற்சி முகாமில் கங்கூலி மிஸ்ஸிங்.

கிரிக்கெட் நட்சத்திரம் அஸாருதீன்; திரை நட்சத்திரம் சங்கீதா பிஜ்லானி; கிரிக்கெட் நட்சத்திரம் சவுரவ் கங்கூலி; திரை நட்சத்திரம் நக்மா.

Beginning of the end?' சே, சே. அபசகுனமாக அப்படியெல்லாம் பேசக்கூடாது?

'**எ**ங்கே போனீர்? என்ன ஆனீர்?' என்ற போன வாரத்துத் தலைப்பு யாரைப் பற்றியது என்று பலருக்கும் சந்தேகம். To quell all doubts: அது பாக்யராஜைப் பற்றியது. அதன் முழு வடிவமானது: அப்பாவிகளின் அரசரே! எந்தத் தப்பும் செய்யாமலேயே மாட்டிக்கொண்டு விழிக்கும் மக்குகளின் மன்னரே! நியாயவான்களும் நேர்மையாளர்களும் ஆரம்பத்தில் அசடாக இருந்தாலும் சதிகார உலகத்தின் சேற்றிலே அமிழ்ந்தாலும், இறுதியாய் வெற்றி பெறுவது நிச்சயம் என்பதைப் படம் படமாக, பாத்திரம் பாத்திரமாக, பாஸிடிவ்வாகக் காட்டி வந்த, ஓ, பாக்யராஜரே! நீர் எங்கே போனீர்? என்ன ஆனீர்!




## வட்டமேஜை

...தெரியாத தயாரிப்பாளர்களைப் பார்த்து பரிதாபப்படுவதா?

கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்.

### ஜெய் ஹிந்த்!

✉ 'அமரர் கல்கியின் ஒரே விருப்பமான தேச நலனை நிறைவேற்றுகிறோமா?' என்று வாசகர்களைக் கேட்டிருக்கிறீர்கள். கல்கியின் ஆரம்ப கால வாசகன் என்ற முறையில் சொல்கிறேன் – நிறைவேற்றுகிறீர்கள், நிறைவேற்றுகிறீர்கள், நிறைவேற்றுகிறீர்கள்!

பாண்டிச்சேரி, எஸ். சதாசிவம்.

### பேச்சு, பேச்சு, போனஸ் பேச்சு!

✉ உங்களுக்கு மூன்று பக்கம் (தலையங்கம் + கார்ட்டூன்) எங்களுக்கு நாலு பக்கம் (தராசு + வ.மேஜை) என்னாச்சு திடீரென்று? வெயில் ஜாஸ்தியா அல்லது உண்மையிலேயே போனஸா? யாரங்கே... கொண்டு வாருங்கள் ஒரு மாலையை!

நெய்வேலி – 8, கருப்பம்புலம் சித்திரவேலு.

### பல்லாண்டு வாழ்க!

✉ புத்த மலராக வாழ்க்கையைத் தொடங்கும் ஜீவன், வாழ்வா சாவா என்று உயிர்ப் போராட்டம் நடத்திக் கொண்டிருக்கும் வேளையில் உதவிக் கரம் நீட்டி, அந்தச் சிறுவனின் மனத்தில் பால் வார்த்திருக்கும் டாக்டர் ராஜ்குமாரையும் 'சுயம்' அமைப்பையும் வாயார வாழ்த்துகிறோம்.

நாமக்கல், சேனூர் எம்.ஏ. சந்திரசேகரன்.

### வழவழா கொழ கொழா...

✉ இருபுறமும் இடிபடும் மத்தளமாகத் தத்தளித்துக் கொண்டு மூப்பனார், தம் கட்சியைத் தற்கொலைக்கு உட்படுத்திக் கொண்டிருக்கும் அவலத்தைப் பளிச்சென்று சுட்டிக் காட்டியது தலையங்கம்!

தூத்துக்குடி, ச.ஆ. கேசவன்.

### டேக் ஆஃப்!

✉ குறையொன்றுமில்லை நான்காம் பாகம் ஆரம்பமே ஜோர்!

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

### பயமுறுத்திட்டீங்களே...

✉ முதல் பக்கத்திலேயே தலைவனின் குளோசப் போட்டு பயமுறுத்தி விட்டீரய்யா... இருந்தாலும் தலைவனைப் பற்றி பல அரிய செய்திகள் கிடைத்தன!

மதுரை-1, என். பாலகிருஷ்ணன்.

### ரகசிய ஸ்பெஷல்!

✉ ரஜினி கட்டுரை, க.சீ. சிவகுமாரின் சிறுகதை, செ.கு. தமிழரசன் பேட்டி, அரசியல் பிட்ஸ், ராமசாமி படையாச்சி சிலை திறப்பு பற்றிய கட்டுரை, அரசியலின் ஆக்ரமிப்போடு தராசு அறிவிப்பு இல்லாமல் தேர்தல் ஸ்பெஷல் பண்ணிட்டீங்களே ஸார்!

சென்னை – 26, தி. மகேஷ்.

### நிஜ 'தராசு'!

✉ தலையங்கமும் சரி, தராசு பதில்களும் சரி, நடுநிலைமையோடு தெளிவாக எழுதப்படுகின்றன. பாராட்டு!

கோயம்புத்தூர், கோ. கல்யாணசுந்தரம்.

### ஐயோ பாவம்!

✉ முருகத்தனை தமிழ் எழுத்தாளராக ஏற்றுக் கொள்ளாத 'கோடீஸ்வரன்' நிகழ்ச்சியை நானும் பார்த்து அதிர்ந்தேன். ஆத்திரப்படுவதா, இதுகூடத்

# ஆஸ்கார் அடிதடி!

ஆஸ்கார் பூமி என்று வர்ணிக்கப்படும் லாஸ் ஏஞ்சல்ஸ் நகரம், எழுபத்து மூன்றாவது ஆஸ்கார் பண்டிகைக்குத் தயாராகிவிட்டது.

இந்த விருதுகள், ஆஸ்கார் கமிட்டி உறுப்பினர்களின் 'ரகசிய வாக்கெடுப்பு' மூலம் நிர்ணயிக்கப்படுவதால், விருப்பு, வெறுப்பு எதுவுமின்றி பரிசுக்குரிய படங்கள் தேர்வு செய்யப்பட்டு வருகின்றன. இதனால் ஆஸ்கார் தேர்வு என்பது கடுகளவும் தவறாய்ப் போனது இல்லை என்பதே உலக நாடுகளின் கருத்தாக இருந்து வந்திருக்கிறது. அதில் இந்த முறை மண் விழுந்து விடுமோ என்று பதறுகிறது 'தி அகதமி ஆஃப் மோஷன் பிக்சர் ஆர்ட்ஸ் அண்டு சயின்ஸ்' என்று அழைக்கப்படும் ஆஸ்கார் அமைப்பு. காரணம், இரண்டாயிரத்திற்கும் அதிகமான கமிட்டி மெம்பர்களின் வாக்குகளைப் பெற, திரைமறைவு முயற்சிகள் நடந்து வருவதை ஆஸ்கார் நிர்வாகத்தால் தடுக்க முடியவில்லை. ஐந்து நட்சத்திர விடுதிகளில் விருந்து, 'வெயிட்'டான பரிசுப் பொருட்கள் என்று கமிட்டி உறுப்பினர்களைச் சந்தோஷத்தில் குளிக்க வைத்து, அவர்களுடைய வாக்குகளை விலைக்கு வாங்க முயற்சி செய்கிறார்கள் பலர். பரிசுக்குரிய இறுதிப்பட்டியலில் இடம் பிடித்திருக்கும் பட நிறுவனங்கள்தான், தேர்வுக் குழு உறுப்பினர்களை இப்படி குஷிப்படுத்தி வருகிறார்கள்.

இதுபோதாதென்று, முடிவுகளை கருத்துக்கணிப்புகள் மூலம் ஒவ்வொரு முறையும் துல்லியமாக அறிவித்துவிடும் 'ஹாலிவுட் ஃபாரின் பிரஸ் அசோஸியேஷன்', 'ஆன்லைன் பிலிம் கிரிடிக் அசோஸியேஷன்' போன்ற அமைப்புகளும் சுடச்சுட தங்களின் முடிவுகளை அறிவித்து உறுப்பினர்களைக் குழப்பிவிட்டுவிட்டன! இதில் லேட்டஸ்ட்டாகச் சேர்ந்து கொண்டிருப்பது 'கோல்டன் க்ளோப்' அமைப்பின் கருத்துக் கணிப்பு முடிவுகள்!

அரசியல் மிகுந்து, களேபரமாகியிருக்கும், ஆஸ்கார் பந்தய மைதானத்திற்குப் படையெடுத்த படங்கள் மொத்தம் இருநூற்று நாற்பத்து இரண்டு. ரேஸில் ஜெயித்து நாமினேஷனுக்குத் தகுதிபெற்றவை முப்பத்தேழு படங்கள்தான். இப்படி வடிகட்டுவதற்கு ஆஸ்கார் கமிட்டி எடுத்துக் கொண்ட கால அளவு எட்டு மாதங்கள்.

சிறந்த படத்திற்கான விருதுக்கு, அயல் நாட்டுப் படங்கள் பெரும்பாலும் பின்தங்கி விடுவதே வாடிக்கை. இந்தமுறை அமெரிக்கர்களின் அடிவயிற்றைக் கலக்கியிருக்கிறது உலகம் முழுக்க வசூலை வாரிக்குவித்துக் கொண்டிருக்கும் 'க்ரவுச்சிங் டைகர்ஸ், ஹிடன் டிராகன்' என்ற சீன படம்.

இருநூற்று ஐம்பது கோடி ரூபாய் செலவில் தயாரிக்கப்பட்டிருக்கும் இந்தப் படம், சிறந்த படத்திற்காக நாமினேட் செய்யப்பட்டிருக்கும் ஐந்து படங்களில் இரண்டாவது இடத்தைப் பிடித்திருக்கிறது. இதுபோதாது என்று, இயக்கம், திரைக்கதை, படத்தொகுப்பு, கலை இயக்கம், பின்னணி இசை, பாடல்கள், அனிமேஷன், உடைகள், போன்ற பதினோரு பிரிவுகளில் நாமினேட் செய்யப்பட்டுள்ளதோடு, 'சிறந்த அயல்நாட்டுப் படம்' என்று பிரிவிலும் வரிந்து கட்டிக் கொண்டு களத்தில் நிற்பதால், இந்தப் படத்திற்குக் குறைந்தது இரண்டு விருதுகள் உறுதி என்கிறார்கள்.



• டாம் ஹாங்ஸ்

சிறந்த நடிகருக்கான விருதை 'கிளாடியேட்டர்' திரைப்படத்தின் ரஸ்ஸல் குரோவ் பெறப் போகிறாரா அல்லது 'பிஃபோர் நைட் ஃபால்ஸ்' புகழ் ஜேவியர் பார்டெம் பெறுவாரா? அல்லது 'காஸ்ட் அவே' நாயகர் டாம் ஹாங்ஸ் தட்டிச் செல்வாரா என்று விவாதம் வலம் வருகிறது.

சிறந்த நடிகை...? 'எரின் புரோகோவிச்' புகழ் ஜூலியா ராபர்ட்ஸுடன் போட்டி போட வேறு நடிகை இருப்பதாகத் தெரியவில்லை!

— விஷுவல்தாசன்

**வா**ய்க்கால் ஓரத்திலே வெள்ளை வெளேரென்று பார்த்திருப்பீர்கள் – கொக்கு! சாத்விக குணத்தோடு அது 'தபஸ்' பண்ணுவதைப் பார்த்தால், அந்த அழகைப் பார்த்தால் ஏமாந்து விடுவோம். பரம ஏகாந்தியாய், ஞானி மாதிரி தோன்றும். ஆனால் மொத்தமும் வஞ்சனை! தண்ணீரிலே சின்னச் சின்ன மீன்களாகப் போய்க் கொண்டிருக்கும். அதையெல்லாம் இது தொடவே தொடாது! பெரிதாக ஏதாவது வருகிறதா என்று பார்த்துக் கொண்டேயிருக்கும்.

பெரிய மீன் பார்க்கும். 'சின்னதெல்லாம் போகிறதே... நாமும் போகலாமே' என்று அந்த வழியே போய் கொக்கிடம் மாட்டிக் கொள்ளும்!

இப்படிப்பட்ட வஞ்சனையாளர்கள் கொக்கு மாதிரி வஞ்சிக்கிறவர்கள், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுகிறவன், பூனையைப் போல் ஏமாற்றுகிறவன், இவர்களோடு சேர்த்து இணையானவன் 'கர்மாவை விட்டவன்' என்று சாஸ்திரம் சொல்கிறது. இந்த நான்கு பேரையும் ஒரே நிலையில் நிறுத்துகிறார் பராசர மஹரிஷி.

இத்தகையவர்களோடு பேச்சு வார்த்தை கூட வைத்துக் கொள்ளாதே; இவர்களைச் செளக்கியமா என்று கூடக் கேட்காதே என்கிறார்.

ஆகையினாலே, கர்மாவுக்கு அத்தனை முக்கியத்துவம் கொடுக்கிறது சாஸ்திரம்.

அதற்காக பெளண்டரீக யக்ஞம் பண்ணுகிறேன் என்று ஆரம்பித்தால் இந்தக் கலியுகத்திலே முடியுமா? அச்வமேத யக்ஞம் பண்ண முடியுமா? – முடிகிற காரியமா!

இந்த மாதிரி வீணான விஷயங்களில் ஈடுபட்டு காலத்தைக் கெடுத்துக் கொள்ளாதே; இந்த சரீரத்தைக் கெடுத்துக் கொள்ளாதே; மறுபடி இந்தக் காலம் கிடைக்குமா? இந்த சரீரம் கிடைக்குமா? இந்த மாதிரி வசதி நமக்கு ஏற்படுமா...? அதனால் கிடைத்ததை நீ சத்விநியோகம் பண்ணுகிற மாதிரியான காரியங்களில் ஈடுபடு என்று கற்றுத் தருகிறது.

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

சாஸ்திரம்.

**'ச**ர்வ தர்மங்களையும் விட்டு என்னைப் பற்று' என்று கீதையிலே பகவான் சொன்னதற்கு இன்னொரு விதமாகவும் வியாக்யானம் சொல்லியிருக்கிறது. 'சர்வ தர்மங்களாலும் விடப்பட்ட நீ...' என்றும் அந்த சம்ஸ்கிருத வாக்கியத்துக்குப் (சர்வ தர்மான்...) பொருள் கொள்ளலாம். 'அப்படிப்பட்ட நீ என் ஒருவனையே சரணடைந்தாயானால், கர்மயோகம் பண்ணினால் என்ன சந்தோஷம் அடைவேனோ... ஞான யோகம் பண்ணினால் என்ன சந்தோஷத்தை அடைவேனோ, அப்படியொரு சந்தோஷத்தை அடைவேன்!' என்கிறான் பகவான். அவன் திருவடியைப் பற்றினால் என்னென்ன சந்தோஷம் அவனுக்கு ஏற்படுகிறது பாருங்கள்! அந்தந்த ஸ்தானத்தில் அவனே நின்று பூரண பலனைக் கொடுக்கிறான்.

அவன் திருவடியைப் பற்றவேண்டுமானால் அதற்கான

எல்லாவற்றையும்விட எளிய உபாயம் அவனுடைய திருநாமம்தான்! அவனுடைய திருநாமம் அவனைக் காட்டிலும், அவன் சரித்திரத்தைக் காட்டிலும் மங்களம்.

'நாராயணா' என்று நாம் சொல்கிற சப்தத்தைக் கேட்கிறபோது அப்படியே உருகிப் போய்விடுகிறானாம் பரமாத்மா! அவனே அதைக் கேட்டு ஆனந்திக்கிறான் என்கிறது சாஸ்திரம்!

நாராயண சப்தம் இருந்தும், நமக்கு வாக்கு பலம் இருந்தும், அதைச் சொல்லாமல் வேறு வீணான காரியங்களில ஈடுபடுபவர்களைச் சாஸ்திரம் சாடுகிறது.

ஒருவர் பெரிய ஆசு கவியாம். பார்த்த மாத்திரத்திலேயே பாடல் எழுதி விடுவாராம்!

ஆனால் பாருங்கள்... அவர் ஒரு ராஜாவைக் குறித்து ஆயிரம் பாசுரம் எழுதினார்.

கடகடவென்று அத்தனையையும் எடுத்துக் கொண்டு ராஜ சமஸ்தானத்தில் பரிசு வாங்க வேண்டுமென்று போனார். போனால், யம படாள் மாதிரி இரண்டு காவலாளிகள்! வழியை மறைத்துக் கொண்டு நிற்கிறார்கள்.

இவர் ஒரு மாதம் நின்றார்! ஒரு மாதத்துக்கப்புறம் சேனாதிபதியின் தரிசனம் கிடைத்தது! அவர் 'மந்திரியிடம் சொல்கிறேன்' என்று போய் விட்டார். அதற்கப்புறம் ஒரு மாதம் சென்று மந்திரியினுடைய தரிசனம் கிடைத்தது!

“ராஜாவானவர், வேட்டையாடுவதற்கும் வேட்டைக்குப் போவதற்கும் இரண்டு மாதம் ஒதுக்கி வைத்திருக்கிறார். போய் வந்து ஒரு மாத காலம் ஓய்வாக இருப்பார். அந்த சமயத்திலே நீர் வந்து இந்தப் பாடல்களைச் சொல்லும்! உமக்குப் பரிசு நன்றாகக் கிடைக்கும்'' என்று சொல்லி அனுப்பி விட்டார் மந்திரி.

ஆனால், வேட்டைக்குப் போன ராஜாவை ஒரு சிம்ஹம் பின்னாலேயிருந்து அடித்துக் கொன்றது! அவன் மாண்டு போனான்!

இங்கே, ஊரெல்லாம், ராஜா இன்னும் இரண்டு நாளில் வந்து விடுவாரென்று அலங்கரித்து, முத்து ஹாரத்தியும் பவள ஹாரத்தியும் தயார் பண்ணி வைத்திருக்கிறார்கள்!

ராஜா மாண்டு போனான் என்றதும் இந்த துர்மரணம் ஏன் வந்தது என்று ஆராய ஆரம்பித்தார்கள். ஆஸ்தான புரோகிதர் சொல்லி விட்டார் : "ஒருத்தர் புறப்பட்டுப் போன பிற்பாடுதான் சரமஸ்லோகம் எழுத வேண்டும். இந்தக் கவி இருக்கிறானே... அவன் இவர் இருக்கிறபோதே 1008 சரம சுலோகம் எழுதி விட்டான். ராஜாவைப் பற்றிப் பாசுரம் எழுதியதாலே அவர் மாண்டு போனார்."

மந்திரி பார்த்தார்... கவியைப் பிடித்து வந்து காராக்கிரஹத்தில் தள்ளிவிட்டார்! 1008 பாசுரத்துக்கு ஏகமாகக் கிடைக்கும் என்று பார்த்தால் அவருக்குக் காராக்கிரஹம் தான் கிடைத்தது!

அப்போதும் அந்தக் கவி என்ன நினைத்தாராம்... ஒருவேளை அந்த ராஜா திரும்பி வந்து தன்னுடைய பாசுரத்தைக் கேட்டு, ஒவ்வொரு பாசுரத்துக்கும் பத்து பத்து ரூபாய் கொடுத்தானானால், அத்தனை பணத்தையும் வீணான விதங்களிலே எப்படியெல்லாம் செலவு செய்யலாம் என்று கற்பனை செய்தாராம்! அப்படிச் செலவு செய்து விட்டுத் திரும்பவும் வந்து ராஜாவைப் பாடலாமா என்று யோசனை பண்ணினாராம்!

நீ கவிஞனா? சிறந்த ஞானம் இருக்கிறதா? என் அரங்கனைப் பாட வேண்டாமா? அவனைப் பாடாத பாட்டு எதற்கு?

அந்த லக்ஷ்மி நரசிம்ஹனைப் பாடாத பாட்டு ஒரு பாட்டா?

ஆகையினால்தான், 'மானுடம் பாடேன்' என்று சுவாமி தேசிகன் வைராக்கியமாய் இருந்தார். 'வைராக்ய பஞ்சகம்' என்றே பாடியிருக்கிறார் அவர். அவ்வளவு வைராக்கியம் கொடுக்கும் அதைச் சொல்கிறவர்களுக்கு!

வித்யாரண்யர் சுவாமி தேசிகனை ராஜ சமஸ்தானத்திலே வந்து இருக்கும்படியாகக் கேட்டு ஓலை அனுப்பினாராம்.

அதற்குப் பதில் எழுதுகிறார் சுவாமி தேசிகன்:

ஒரு பூமி; அந்த பூமியின் மூலையிலே ஒரு நூறு கூறு போட்டால் அதில் ஒரு பாகம்; அதைப் பரிபாலனம் பண்ணுவ

## அருள்வாக்கு

**ம**னத்தில் அன்பும் சந்தோஷமும் இருக்கிறபோதுதான் புத்தி தெளிவாக இருக்கிறது. புத்தி தெளிவாக இருக்கிறபோது படித்தால் பாடம் நன்றாக ஏறுகிறது. கோபம், ஆத்திரம், அழுகை, பொறாமை எல்லாம் உண்டாகிறபோது புத்தி குழம்பிப் போகிறது. அப்போது படிப்பும் ஏற மாட்டேன் என்கிறது.

தினமும் கொஞ்ச நாழி ஸ்வாமியைப் பார்வதி-பரமசிவனாகவோ, மகாலக்ஷ்மி-

மகாவிஷ்ணுவாகவே நினைத்துக் கொண்டு விட்டீர்களானால் மனம் நல்லதாக ஆகும்; புத்தியும் தெளிவாக ஆகும். அதனால் படிப்பும் நன்றாக வரும். நன்றாகப் பாஸ் பண்ணி விடலாம்.



ரொம்பப் புத்திசாலியாக இருந்து நிறைய மார்க் வாங்கிப் பாஸ் பண்ணினால்கூட, நல்லவன் என்ற பெயரெடுக்காவிட்டால் பிரயோஜனம் இல்லை. நல்ல பெயர் இல்லாவிட்டால் பிற்காலத்தில் வாழ்க்கையில் முன்னேறவே முடியாது. நல்லவனாக இருந்து விட்டால் அது நமக்கும் சந்தோஷம்; மற்றவர்களுக்கும் சந்தோஷம்; பெரியவனான பின் வாழ்க்கையில் முன்னுக்கு வருவதற்கும் அதுதான் உதவும்.

நம்மை நல்லவர்களாக, புத்திசாலிகளாக, இரண்டாகவும் செய்வது ஸ்வாமியிடம் நாம் வைக்கிற பக்திதான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

தாலேயே 'துர்வார கர்வா'! தான் சக்ரவர்த்தி என்கிற கர்வம் கொண்டிருக்கிறான் ஒருவன்... அப்படிப்பட்டவனை இந்திரன் என்றும் சந்திரன் என்றும் சொல்ல வேண்டுமா...? ஒரு சாமானியனைச் சொல்ல வேண்டுமா...! ஒரு சாமானியனைக் குறித்து நான் பேச மாட்டேன். பின்னே யாரைச் சொல்லுவேன் என்றா கேட்கிறீர்கள்...?

பரம தரித்திரன் குசேலன்! கிழிந்து போன வஸ்திரம். அதை இப்படி மடித்து, அப்படி மடித்து, அதிலே அவலைக் கட்டி எடுத்துப் போனான். வீட்டிலே ஒன்றுமே கிடையாது. எம்பெருமானுக்கு உபயோகமாக இருக்கட்டும் என்று அங்கங்கே போய் யாசகம் பண்ணி, அவரவர் வீட்டிலே உரலில் இடித்த அவலையெல்லாம் கொண்டு வந்தான். அந்த வஸ்திரத்திலே அதை வைத்து முடிந்தால் சஹஸ்ர தாரா மாதிரி – பகவானுக்கு திருமஞ்சனம் செய்வார்களே சல்லடை வழியாக – அது மாதிரி கொட்டுகிறது!

குசேலரின் தர்மபத்தினி இருக்கிறாள் பாருங்கள்... அவளுக்கு எவ்வளவு பொறுமை! கந்தலில் அவலை முடிந்து தருகிறாள். நன்றாயிருக்கிற வஸ்திரத்தில் நாம் முடிந்து பார்த்தாலே சிந்திக் கொண்டே போகிறது நாம் கட்டுவது. இவள் அத்தனை கந்தலிலும் முடிச்சுப் போட்டுக் கொடுக்கிறாள். அந்த சுகபிரும்ம மஹரிஷியே வியக்கிறார் அதைக் கண்டு!

அந்த கிருஷ்ணனையே நினைத்துக் கொண்டு அதை எடுத்துப் போகிறார் குசேலர்.

அப்படிப்பட்ட ஒரு பிடி அவலுக்காக சமஸ்த ஐச்வர்யத்துக்கும் அவரை எஜமானனாக்கினாரே பரமாத்மா! விச்வத்துக்கெல்லாம் ஈசன் ஆக்கினார்.

நீங்காத செல்வம் என்பது அவன் கொடுப்பது மட்டுமே. மீதி யார் கொடுத்தாலும் செல்வம் குறையும்; நீங்கும். அப்படிப்பட்ட குறைவில்லாத செல்வம் குசேலருக்குக் கிடைத்தது. அந்த தேவாதிராஜனான வரதராஜ பெருமாள் என்கிற தனம் என்னிடம் இருக்கிறபோது இந்த தனமெல்லாம் எதற்கு...? பிரயோஜனமேயில்லை. ஆகையால் ராஜ சமஸ்தானத்துக்கு வரமாட்டேன்" என்று சொல்லி விட்டார் சுவாமி தேசிகன்.

விஷ்ணு தர்மத்திலும் அதையேதான் சொல்லியிருக்கிறது : 'எங்கும் நீ மௌனமாக இரு; பேசுகிறாயா அவன் நாமத்தைப் பேசு!'

**க**ண்ணனிடத்திலே அளவு கடந்த அன்பு கொண்டவர் நம்மாழ்வார்.

கிருஷ்ணனுடைய அவதார காலத்திலே அவனுக்கு எத்தனை சந்தோஷம் ஏற்பட்டிருக்கும்! அந்த கிருஷ்ணனுடைய சந்தோஷத்தையெல்லாம் ஒன்று குவித்துச் சேர்த்துக் கொண்டே வரவேண்டும்... இதிலே சந்தோஷம், அதிலே சந்தோஷம்... என்று எவ்வளவு ஆனந்தப்பட்டிருப்பான் அவன்! ஆனந்த மயன் அல்லவா பரமாத்மா! கிருஷ்ணாவதாரத்தில் பூரணமாக ஆனந்தித்தான் பரமாத்மா; அவனை அடிபணிந்தவர்களையும் ஆனந்திக்கச் செய்தான்.

அந்த கிருஷ்ணனுடைய ஆனந்தமெல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு வடிவெடுத்தது தான் நம்மாழ்வாருடைய வடிவு!

பராசர பட்டாச்சார்யார் சொல்கிறார்: அந்த கிருஷ்ணனுடைய திருஷ்ணை – அந்த திவ்யமான உற்சாகம் – அந்த ஆசை – அது எல்லாம் ஒன்று சேர்ந்து நம்மாழ்வார் என்கிற வடிவிலே வந்து சேர்ந்தது. அப்படிப்பட்ட நம்மாழ்வார்,

*கண்ணன் கழலிணை எண்ணும் மனமுடையார்*
*எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே*

என்கிறார்!

திருவாய்மொழி 1102 பாடலிலே இந்த ஒரு பாடல் தெரிந்தால் போதும்; வேறு எதுவுமே வேண்டாம்!

(வளரும்)



# ரிஷி

சர்வதேச கடத்தல்காரர்கள், வைரம் - கடத்தல், ஹோட்டலில் கவர்ச்சி நடனம் - இடையே துப்பாக்கிச் சூடு, இரட்டை வேட ஹீரோ... படம் ஆரம்பிக்கும்பொழுதே புறாக்கள் கூடு கட்டியிருக்கும் புராதன மண்டபத்துக்குள் அடிக்கும் அதே வாடை மூக்கைத் துளைக்கிறது!

ஹீரோ - "நான் ரெடி, நீங்க ரெடியா?" புகழ் சரத்குமார். அவருடைய 'ரோல் - ஜாதகம்' வருமாறு:

**ரோல் நெம்பர் - 1: பெயர்:** ரிஷி

**உத்யோகம்:** கடத்தல்காரர்களிடமிருந்து ரீ-கடத்தல் செய்யும் கேடி அருண்பாண்டியனின் அடியாள் **ஜோடி:** சங்கவி.

**ரோல் நெம்பர் - 2: பெயர்:** வேலன்

**உத்யோகம்:** கார் - லோன் கொடுக்கும் சௌகார்பேட் - சேட்டின் அடியாள், **ஜோடி:** மீனா.

ஒரு முக்கியமான அமைச்சரின் அதிமுக்கியமான ஃப்ளாப்பி ரிஷியிடம் சிக்கி முதல் மந்திரியிடம் போய்விட, ரிஷியை வைத்தே முதல் மந்திரியின் கதையை முடிக்க அமைச்சர் முயற்சி செய்ய, ஃபிளாப்பியைக் காப்பாற்றும் திட்டம் ஃபிளாப்பாகி சிறை செல்கிறார் அமைச்சர்.

இரண்டு சரத்குமார்களின் தோற்றம், நடை, உடை, பாவனை, பேச்சு எல்லாம், அதே, அதே சபாபதே! ஒவ்வொரு ஃபிரேமிலும், 'இவர் எந்த சரத்குமார்?' என்று நாம் மண்டையைப் புண்ணாக்கி யோசித்து, விடையைத் தோராயமாகக் கண்டுபிடித்து செட்டில் ஆவதற்குள் அடுத்த சரத்குமார் வந்துவிடுகிறார். இந்த லட்சணத்தில், இதர கதாபாத்திரங்களில், யார் யாருக்கு 'ஒரே தோற்றம் - இரண்டு நபர்' விஷயம் தெரியும், யார், யாருக்குத் தெரியாது என்பது வேறு அடிக்கடி மறந்து போய் விடுகின்றது. நமக்குத்தான் இப்படிக் குழப்பித் தொலைக்கிறது என்றால், கதாபாத்திரங்களாவது சூட்டிகையாக இருக்கக் கூடாதோ? ரிஷியின் காதலி, "நீங்க ரிஷிதானே?" என்று ஒரு தடவைக்கு இரண்டு தடவை ஊர்ஜிதப்படுத்திக் கொண்டு 'தபதப'வென்று ஓடிப்போய்க் கட்டிப் பிடித்துக் கொள்கிறார். இதைப் பார்த்து அழுவதா? சிரிப்பதா? என்று ஒரு புதுக் குழப்பம் வந்துவிடுகிறது நமக்கு.

எனக்கு மட்டும் குழப்ப உரிமையில்லையா என்று இசையமைப்பாளர் யுவன்சங்கர்ராஜா, டூயட்டுக்கும் சரி, சோக கீதத்துக்கும் சரி, ஒரே மெட்டு, ஒரே 'பீட்' போட்டு உரிமைப் போராட்டம் செய்திருக்கிறார்!

ஒரு காது ரிப்பேராகிப் போன சேட், தான் பணக்காரன் என்று காதலியை டபாய்க்கும் வேலன், நண்பன் ரமேஷ் கண்ணா, மீனா - இவர்கள் அடிக்கிற கூத்து வாய்விட்டுச் சிரிக்க வைக்கிறது. ஆனால் அதற்காக ஆசைப்பட்டுக் கொண்டு (சி) சுந்தர க(ா)ண்டத்தில் போய் மாட்டிக் கொண்டு விடாதீர்கள்!

— கிருஷ்ணா சிதம்பரம்

● ஃபெயில் ○ ஜஸ்ட் பாஸ் ○ ஆவரெஜ் ○ அபவ் ஆவரெஜ் ○ டிஸ்டிங்ஷன்



டெடி உடன் ஒப்பிட்டால், வேறு எந்த டயாபரும் இப்படித்தான் தோன்றும்.

அறிமுகம் இந்தியாவின் மிக மென்மையான டயாபர் – டெடி

டெடி டயாபர் மிக மிக மென்மையானது. ஏனெனில் இது இணையற்ற சிறந்த பொருட்களால் உருவாக்கப்படுகிறது. அதனால் சந்தையில் மிக உன்னதமான அருமையான டயாபர் என பெயர் பெற்றுள்ளது.

இந்த சிறப்பு வாய்ந்த டயாபரை உங்கள் குழந்தை அணியும்போது அது குழந்தையின் உடலில் கச்சிதமாகப் பொருந்துவதோடு குழந்தைக்கு இலகுவான, வசதியான, இதமான உணர்வுகளை அளிக்கும்.

உங்கள் குழந்தைக்கு வசதி வழங்குங்கள்.
இன்றே டெடிக்கு மாறிடுங்கள்.




டெடி நோபெல் கார்பொரேஷனின் ஓர் தரமான தயாரிப்பு

ஆனந்தமான பேபி டெடி பேபி

Nobel Corporation, B-12, Swati Manor Bldg., N.C. Kelkar Road, Dadar (W), Mumbai - 28. Tel: 436 6276/6282. Fax: 436 6292 • H'bad: 339 2961 • Chennai: 539 3786/3787 • B'lore: 661 5290 • Goa: 287 740/782 401 • Ernakulam: 0984 600 4878

---

# ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®

## இனிப்பு புடவைகள், இனிப்பு வேஷ்டிகள்

பரிசளிக்க புதுமையானவை!
சீர்வரிசைக்கு சிறப்பானவை!
இரசிக்கலாம்! ருசிக்கலாம்!



**ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®**

5, டாக்டர் சிங்காரவேலு வீதி, பாண்டி பஜார், சென்னை-17, போன்: 4343605

4, காந்தி நகர் முதல் மெயின் ரோடு, அடையார், சென்னை-20, போன்: 4413805

சுதந்திரத் தியாகிகள் எப்படி இருப்பார்கள் என்பதற்கு இலக்கணம் வகுக்கிற மாதிரி இருக்கும் ஏ.என்.சிவராமன் பேச்சு, நடவடிக்கை எல்லாமே. கறாரான, கண்டிப்பான, அதே நேரம் கலகலவென்ற நகைச்சுவையும் மேதாவிலாசமும் ததும்புகிற பேச்சு.

அவரது மதிய உணவைப் பார்த்து வியந்திருக்கிறேன். மோர்சாதமும் கீரையும் தான் அவர் உணவு. அவரது நீண்ட ஆயுளுக்கும் ஆரோக்கியத்திற்கும் அவர் குறைவாகச் சாப்பிட்டதும் ஒரு காரணம்.

அவர் எழுத்தில் தென்படும் வேகம் மட்டுமல்ல, அவர் எழுதுகிறபோது தென்படும் வேகமும் ஆச்சரியம் தரும். விறுவிறுவென்று குனிந்த தலை நிமிராமல் பக்கம் பக்கமாக எழுதிக் குவித்துக் கொண்டிருப்பார். அவரது கையில் ஏதோ ஒரு சக்தி புகுந்து அவரை மிக வேகமாக இயக்கிக் கொண்டிருப்பதுபோல் தோன்றும்.

ஒருமுறை நான் ஏதோ எழுதிக் கொண்டிருந்தபோது, பின்னால் நின்று நானறியாமல் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு முன்னால் வந்து, என் பேனாவின் பின்புறம் நான் செருகி வைத்திருந்த பேனா மூடியைக் கழற்றித் தனியே மேசை மீது வைத்தார். கனிவோடு என்னைப் பார்த்து, 'இனிமேல் பேனா மூடியை பேனாவிலேயே வைத்துக் கொள்ளாமல் தனியே எடுத்து வைத்துவிட்டு எழுது. நாமெல்லாம் ஆயுள் முழுவதும் எழுதிக் கொண்டே இருக்கப் போகிறவர்கள். பேனாவைச் சுமப்பதோடு, பேனா மூடியையும் சேர்த்துச் சுமந்தால் விரல்கள் வலிக்காதா?' என்று கேட்டார். அவரது விழிகளில் தென்பட்ட பரிவும் வார்த்தைகளில் தென்பட்ட குளுமையும் என்மேல் பன்னீராய்ப் பொழிந்தன. இப்போதும் எதை எழுதுகிற போதும், பேனா மூடியைத் தனியே கழற்றி வைத்துவிட்டு எழுதத் தொடங்குகிறபோது அவர் நினைவு வருகிறது.

திருக்குறள், பகவத் கீதை, பைபிள், குரான் ஆகிய நான்கு நூல்கள் மீதும் அவருக்கு மிகுந்த ஈடுபாடு இருந்தது. ஒருமுறை வினோபா பாவேயின் கீதைப் பேருரைகள் பற்றி என்னிடம் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார். கடைசியில் 'அர்ச்சுனனுக்குக் கிருஷ்ணன் கீதை சொன்னான். நான் இன்று கிருஷ்ணனுக்கே கீதை சொல்லியிருக்கிறேன்!' என்று சொல்லிச் சிரித்தார்.

கடைசிக் காலங்களில் தீவிர வேத ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார். சிறிய டேப்ரிகார்டர் அவரது காதில் குண்டலம்போல் நிரந்தரமாக இடம்பெறப் பாடுபட்டுக் கொண்டிருந்தது. ஒலிப்பேழையில் பதிவு செய்த வேத சுலோகங்களை ஓயாமல் கேட்டும், வேதம் தொடர்பான புத்தகங்களைப் படித்தும் குறிப்பு எடுத்துக் கொண்டிருந்தார்.

அவரது அன்பரான கீழாம்பூர் எஸ்.சங்கர சுப்பிரமணியன், ஏ.என்.எஸ்ஸின் வாழ்க்கை வரலாற்றைத் தொகுத்து எழுதும் பணியில் தற்போது ஈடுபட்டிருக்கிறார் என்பது மகிழ்ச்சி தரும் செய்தி.

முதுமை காரணமாக தினமணியிலிருந்து அவர் ஓய்வு பெற்றபோது 'ஆசிரியர் ஏ.என்.சிவராமன்' என்று தினமணியின் முதல் பக்கத்தில் இடம் பெற்ற அந்தப் பெருமைக்குரிய சொற்றொடர்கள் விடைபெற்றன. அவரது பெயர் இல்லாமல் வெளிவந்த தினமணியைப்பார்த்து, 'திலகம் இல்லாத நெற்றிபோல் இருக்கிறதே தினமணி' என்று வருத்தப்பட்டு ஆயிரக்கணக்கான வாசகர்கள் கடிதம் எழுதினார்கள். தமிழ் நாளிதழ்த் திலகம் இப்போது நிரந்தரமாய் உதிர்ந்துவிட்டது.

- திருப்பூர் கிருஷ்ணன்

• ஏ.என்.சிவராமன்



# நாளிதழ் நாயகன்!

# 10

**ராஜேஷ்குமார்**

# உறைபனி நிலவு

வந்தாலும் எனக்குக் கொடுக்காதே....!"

"எஸ்... ஸார்..."

பர்வதா கதவைச் சாத்திக் கொண்டு வெளியேறிப் போக தயானந்த் டி.வி.க்கு முன்பாய்ப் போடப்பட்டிருந்த சோபாவுக்குச் சாய்ந்தார்.

"நீயும் உட்கார் வருண்..."

வருண் தயங்கித் தயங்கி அவருக்குப் பக்கத்தில் ஒரு அன்னியப் பொருள் மாதிரி உட்கார்ந்தான். தயானந்த் தம் கையில் வைத்திருந்த ரிமோட் கண்ட்ரோலின் உதவியால் டெக்குக்கு உயிர் கொடுத்து 'ப்ளே' பட்டனைத் தட்டினார்.

"வருண்...! நாம இப்போ ரெண்டு காஸட் பார்க்கப் போறோம். முதல் காஸட் ஆறு நிமிஷமும் ரெண்டாவது காஸட் எட்டு நிமிஷமும் ஓடும். இந்த ரெண்டு காஸட்டையும் பார்த்து முடிச்ச பதினாலாவது நிமிஷம்... நான் எதுவும் பேச மாட்டேன், நீதான் பேசப் போறே..."

தயானந்த் சொல்லிக் கொண்டிருக்கும் போதே டி.வி. திரை முழுக்க வெளிச்சப் புள்ளிகள் உற்பத்தியாகி 'திடும்' என்று ஒரு பெரிய ஹாலைக் காட்டியது. ஹால் சீலிங்கில் வர்ண பலூன்கள் ஒட்டிக்

**வ**ருணின் தோளில் கை போட்ட தயானந்த் அவனை மெல்லக் கூட்டிக் கொண்டு பக்கவாட்டில் தெரிந்த ஒரு அறைக்குள் நுழைந்தார். அறை அரை யிருட்டாய் ஒரு ஜீரோவாட்ஸ் வெளிச்சத்தின் உதவியோடு பொருள்களைக் காட்டியது.

நல்ல அகலத்தில் ஒரு வார்ட்ரோப், குட்டி வெள்ளை யானையாய் ஒரு ஃப்ரிட்ஜ், ஃபைபர் மேஜையின் மேல் முக்காடு போட்டுக் கொண்ட பெண்டியம் கம்ப்யூட்டர்கள். பர்வதா டி.வி.க்கு பக்கத்தில் தெரிந்தாள்.

"டெக் கனெக்‌ஷன் கொடுத்திட்டியா பர்வதா?"

"கொடுத்துட்டேன் ஸார்."

"அந்த ரெண்டாவது காஸட் எங்கே?"

"டி.வி.மேல வெச்சிருக்கேன் ஸார்..."

"சரி... நீ போய்க் கொஞ்சம் வெளியே இரு. எவ்வளவு முக்கியமான போன்கால்

கொண்டு அசைய அதன் நடுவே ஜிகினா தோரணங்கள் மினுமினுப்பாய் ஓடின. சுவரில் பூ வேலைப்பாடுகளோடு கூடிய 'ஹேப்பி பர்த்டே வைசாலி' என்ற எழுத்துக்கள். காமிராவின் கோணத்துக்கு வந்துவிட்டு மாடிப்படிகளைக் காட்ட அந்தப் பெண் பட்டுப் புடைவையில் இறங்கிக் கொண்டிருந்தாள். அழகாக இருந்தாள். யாருக்கோ கைகாட்டிச் சிரித்தபோது வலது பக்கக் கன்னத்தில் குழி விழுந்தது.

தயானந்த் வருணின் கையைத் தொட்டார்.

"வருண்..."

"ஸார்..."

"இது என்னோட மனைவி. பேர் வைசாலி. பத்து வருஷத்துக்கு முந்தி எடுத்த வீடியோட காஸட் இது. ஹோட்டல் 'கோல்டன் ராக்'கில் ஏற்பாடு செய்யப்பட்ட இந்த பர்த்டே பார்ட்டியில் மோஸ்ட் வி.ஐ.பீஸ் கலந்துக்கிட்டாங்க. அந்த வழுக்கைத் தலை நபர்தான் டெப்டி போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் கோவர்த்தன். அந்த டால் பர்ஸன் வித் க்ரே ஹேர் ஹைகோர்ட் ஜட்ஜ் சுகவனம்."

வருண், தயானந்த் சொல்வதைக் கேட்டுக் கொண்டே டீ.வி. திரையை இமைக்காமல் பார்த்தான். வைசாலி இப்போது தகதகக்கும் பட்டுப் புடவையோடு ஹாலில் பரவியிருந்த எல்லோருக்கும் வணக்கம் சொல்லிக் கொண்டே தாமரைப் பூ வடிவத்தில் இருந்த அந்தப் பெரிய கேக்குக்கு முன்பாய் வந்து நின்றாள். கேக் அருகே காத்திருந்த தயானந்த் கையில் வைத்திருந்த மல்லிகை மாலையை அவளுடைய கழுத்தில் போட கைத்தட்டல் எழுந்தது. வைசாலி வெட்கத்தோடு சிரித்துக் கொண்டே கேக்கின் மேல் நடனமாடிக் கொண்டிருந்த மெழுகுவர்த்தி ஜுவாலைகளை அணைத்து விட்டு ஒரு சிறிய கத்தியால் கேக்கின் ஓரப் பகுதியை வெட்டி அந்தத் துண்டை எடுத்து தயானந்துக்கு ஊட்ட முயல அவர் அதைத் தடுத்து அந்த கேக் துண்டத்தையே வைசாலியின் வாயில் திணிக்க, மறுபடியும் ஆரவாரக் கைத்தட்டல். க்ளோஸப் ஷாட்டில் வைசாலி கேக்கைச் சிரிப்போடு மென்று கொண்டிருக்கும் போதே திரையில் முகம் மறைந்து டெக்கில் காஸட் சுழல்வது நின்றது.

தயானந்த்



வருணைத் திரும்பிப் பார்த்தார்.

"ரெண்டு மணி நேரம் ஓடக்கூடிய காஸட்டிலிருந்து ஆறு நிமிஷம் மட்டும் ஓடக்கூடிய பகுதியை எடுத்து உனக்கு போட்டுக் காட்டியிருக்கேன். என் ஒய்ஃப் எப்படி இருக்கா...? அழகாயிருக்காளா...?"

"ரொம்ப நல்லாயிருக்காங்க ஸார்."

"வைசாலி எனக்கு மனைவியா வந்த பின்னாடிதான் என்னோட பிசினஸ் பிக்கப் ஆச்சு. கோடிக்கணக்கில் பிசினஸ் என்கிற வார்த்தையை என்னால சுலபமாச் சொல்ல முடிந்தது. வைசாலி எனக்குக் கிடைச்ச வரப்பிரசாதம்" சொல்லிக் கொண்டே தயானந்த் எழுந்து டி.வி.யை நோக்கிப் போய் அதன் தலைமேல் இருந்த இன்னொரு கேஸட்டை எடுத்து டெக்கின் வாய்க்குள் திணித்து விட்டு வருணுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார்.

"வருண்....! இப்போ நாம பார்க்கப் போகிற இந்த ரெண்டாவது காஸெட், தபாலில் எனக்கு யாரோ அனுப்பியது. அது யாருன்னு எனக்குத் தெரியாது. எட்டு வருஷத்துக்கு முன்னாடி அன் ரெஜிஸ்டர்ட் போஸ்ட் தபாலில் வந்தது. எட்டு நிமிஷம் ஓடக்கூடிய இந்தக் கேஸட்டை நீ மட்டுந்தான் பார்க்கப் போறே. நான் பார்க்க மாட்டேன். என்னால பார்க்கவும் முடியாது. இந்தா, ரிமோட் கண்ட்ரோல். ப்ளே பட்டனை நீயே தட்டு."

ரிமோட் கண்ட்ரோலை வருணின் கையில் கொடுத்து விட்டு டி.வி.க்கு எதிர்ப் புறமாய் தயானந்த் உட்கார்ந்து கொண்டார்.

வருண் தயக்கமாய்க் குரலை இழுத்தான்.

"ஸார்... இந்தக் காஸட்ல என்ன இருக்கு?"

"ப்ளே பட்னைத் தட்டு... தெரியும்."

வருண் தயக்கத்தோடு 'ப்ளே' பட்டனைத் தட்ட டி.வி. திரை உயிர் பெற்றது. கிறல் கிறல்களாய் ஒளிக்கோடுகள் தோன்றிய பின் கம்ப்யூட்டர் வடிவ தமிழ் எழுத்துக்கள் திரையில் உற்பத்தியாயிற்று.

தயானந்த்! நீ இதயத்தைத் திடப்படுத்திக் கொண்டு பார்க்க வேண்டிய எட்டு நிமிட வீடியோ காஸட் இது. எதற்கும் முன் எச்சரிக்கையாக உன் குடும்ப டாக்டரை வரவழைத்துக் கொண்டு அவரோடு இந்த காஸட் பார்ப்பது உத்தமம்.

வருண் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்த எழுத்துக்கள் மறைந்து ஒரு பாழடைந்த வீட்டின் அறைக்குள் காமிரா போயிற்று. குண்டும் குழியுமான தரைப் பகுதி. வெடிப்புகளோடு கூடிய சுவர்ப் பகுதியில் செங்கற்கள் பிடிப்பில்லாமல் எட்டிப் பார்த்தன. இரண்டு அறைகளைக் கடந்த காமிரா இப்போது ஓர் அறையைக் காட்டி விரைவு இல்லாமல் நின்றது. அறையின் நடுவே போடப்பட்ட கயிற்றுக் கட்டிலில் அந்தப் பெண் தெரிந்தாள். உடம்பு, கட்டிலோடு சேர்த்துக் கட்டப் பட்டிருக்க, வாயில் துணிப் பந்து. மிரண்ட கண்கள்.

காமிரா அந்தப் பெண்ணின் முகத்தை க்ளோஸப்பில் காட்ட, வருண் திடுக்கிட்டான்.

அது தயானந்தின் மனைவி வைசாலி.

அதிகரித்து விட்ட இருதயத் துடிப்போடு வருண் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஒரு கை பெட்ரோல் கேனோடு டி.வி. திரையில் தொடர்ந்தது. கூடவே பின்னணிக் குரல்.

"தயானந்த்...! உன்னோட அழகான மனைவிக்கு இப்போ பெட்ரோல் குளியல் நடக்கப் போகுது. அடுத்த ரெண்டு நிமிஷத்துக்குள்ளே அவ உடம்பே ஒரு விறகுக் கட்டையாக மாறி தகதகன்னு எரியப் போகுது. எதுக்காக இந்தத் தகனக் கிரி



"என்னது... உங்க படத்தோட கதை என்னோடதுதான்னு கேஸ் போடணுமா! எதுக்கு சார்?"
"படத்துக்கு விளம்பரம் செய்ய வேற வழியே தெரியலீங்க எனக்கு!"
– சீர்காழி வி. ரேவதி

"அந்த லேடி டாக்டர் டி.வி. சீரியல்ஸ் பயங்கரமா பார்ப்பாங்கன்னு எப்படிச் சொல்றே!"

"'சிகரம்' சீரியல் முடிஞ்சதும் ஒரு மாத்திரையும் 'அம்மா' சீரியலுக்குப் பிறகு ஒரு மாத்திரையும் 'சித்தி'க்குப் பிறகு தினமும் ஒரு மாத்திரையும் சாப்பிடுங்கன்றாங்களே!"

– மங்கை



யைன்னு நீ அதிர்ந்து போகலாம். உன்னை மாதிரியான புதுப் பணக்காரனுக்குப் பழசெல்லாம் மறந்து போயிருக்கும். அந்தப் பழசையெல்லாம் ஞாபகப்படுத்தத்தான் உன்னோட அழகான அன்பான மனைவிக்குத் தகனக் கிரியை. இந்தக் கேஸட்டை நீ இண்டர் போலீஸ்க்கே போட்டுக் காட்டினாலும் சரி, என்னை நெருங்க முடியாது. நான் யாருன்னும் கண்டுபிடிக்க முடியாது...." குரல் ஒலித்துக் கொண்டிருக்கும் போதே ஒரு தீக்குச்சி உரசப்பட்டு வைசாலியின் மேல் போய் விழ அவள் ஒரு பெரிய தீப்பிழம்பாய் மாறினாள். கட்டிலினின்றும் துள்ளி விழுந்த உடம்பு இரண்டு தடவை எழ முயன்று பின் அப்படியே மடங்கியது. பின் நிதானமாய் நின்று எரிய ஆரம்பிக்க மறுபடியும் கேன் மூலம் பெட்ரோல் தெளிக்கப்பட்டது. இப்போது டி.வி. திரை பூராவும் வேகமாய் அசையும் தீ நாக்குகள்!

பின்னணி குரல் ஒலித்தது.

"தயானந்த்! உனக்கு உன்னுடைய மனைவி வைசாலியின் ஞாபகம் வரும் போதெல்லாம் இந்த வீடியோ காஸட்டைப் போட்டுப் பார்த்துக் கொள். உன் மனைவியின் மறைவுக்கு என் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன். காஸட் இன்னும் ஒரு நிமிஷம் மட்டுமே ஓடும். அதற்குள் உனக்கு இன்னொரு முக்கியமான விஷயத்தையும் சொல்லி விடுகிறேன். நீ இரண்டாவதாக எந்தப் பெண்ணையும் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது. மீறி செய்து கொண்டால் வைசாலிக்கு என்ன நிலைமை ஏற்பட்டதோ அதே நிலைமைதான் உன் இரண்டாவது மனைவிக்கும் ஏற்படும். இதை நீ ஓர் எச்சரிக்கையாகவும் எடுத்துக் கொள்ளலாம். வேண்டுகோளாகவும் எடுத்துக் கொள்ளலாம்."

திரை முழுக்க தீ நாக்குகள் அசைந்து கொண்டிருக்கும்போதே காஸட் சுழல்வது நின்றது.

தயானந்த் திரும்பினார். அவருடைய இரு விழிகளிலும் பாதரசமாய் நீர் மினுமினுத்தது.

"காஸட்டைப் பார்த்தியா வருண்...?"

"பா... பார்த்தேன் ஸார்..."

"என்ன நினைக்கிறே...?"

"மகா கொடுமை ஸார்...! இந்த அக்கிரமத்தை யார் ஸார் பண்ணினது...?"

"கடந்த எட்டு வருஷ காலமா இப்ப நீ கேட்ட கேள்விக்கு எனக்கு விடை தெரியாமலே இருந்தது. பட், போன வாரம்தான் அது யாருன்னு எனக்குத் தெரிஞ்சுது..."

"யார் ஸார்...?"

"வா... சொல்றேன்..." எழுந்தார் தயானந்த்.

**ய**முனா தன்னுடைய அறையில் கண் மூடிச் சோர்வாய்ப் படுத்திருந்தாள். வயிற்றில், கல்லை விழுங்கிவிட்ட தினுசில் பயம். இன்ஸ்பெக்டர் பால்பாண்டியனையும் இறந்து போன லீலாகிருஷ்ணனையும் நினைக்கும் போதெல்லாம் இதயம் சூடுபட்டதைப் போல் சில விநாடிகளுக்குத் துடித்தது.

ஹால் கடிகாரத்தில் மணி ஒன்பது அடித்தபோது யமுனாவின் சிறிய நெற்றியில் அவசர அவசரமாய் வியர்வைச் சரம் ஒன்று கோத்தது.

'இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் சரியாய்ப் பத்து மணிக்கெல்லாம் பக்கத்துத் தெருவில் இருக்கும் பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயிலுக்கு வந்து விடுவாரே...! சரனாவும் வந்து விடுவான். வீட்டுக்குள் இப்போது நிலவும் சூழ்நிலையைப் பார்த்தால் வெளியே கிளம்பிப் போக முடியாது போலிருக்கிறதே...!'

'சரனாவுக்கு ஃபோன் செய்து நிலை



பண்றான்...?"

"கோவிந்தசாமியா... யாரது...?"

அகில் அவளுடைய வயிற்றைத் தொட்டுக் காட்டிச் சொன்னான்.

"நம்ம பையனைச் சொன்னேன்..."

"என்னங்க இது...! நம்ம பையன் பேரு கோவிந்தசாமியா...?"

"ஆமா... கோவிந்தசாமி என்னோட தாத்தா பேரு. இந்தக் குடும்பத்தோட வழக்கப்படி பெரியவங்களோட பேரைத்தான் வெப்பாங்க. எங்கப்பாவோட தாத்தா பேரு அகிலாண்டேஸ்வரன். எனக்கும் அந்த பேர்தான். சுருக்கமா என்னை எல்லோரும் 'அகில்'ன்னு கூப்பிட்டு அதையே பழக்கப்படுத்திட்டாங்க..."

"என்னங்க... நம்ம பையனை கோவிந்னு கூப்பிட்டுக்கலாமா...?"

"பொண்ணு பொறந்துட்டா என்ன பண்ணுவீங்க?" - கேட்டுக் கொண்டே திலகவதி உள்ளே வர அகில் வேகவேகமாய் வெளியேறினான்.

திலகவதி சிரிப்போடு யமுனாவின் கன்னத்தைத் தட்டினாள். "பையனைப் பெத்துக்க ப்ளானா?... மொதல்ல எனக்கு பேத்தி தான் வேணும்..."

யமுனா வெட்கச் சிரிப்போடு தலையைக் குனிந்து கொள்ள, திலகவதி தொடர்ந்தாள்.

"இன்னிக்கு பூராவும் நீ இந்த ரூமை விட்டு வெளியே வரவே கூடாது... எல்லாத்தையும் ஹரிதாவும் சௌம்யாவும் பார்த்துக்குவாங்க..."

"அத்தே... வந்து..."

"ஒண்ணும் பேசக் கூடாது. இந்த ரூமை விட்டு வெளியே வந்தா உன்னோட மாமாவுக்குக் கோபம் வந்துடும். எது வேணும்னாலும் ஒரு குரல் கொடு. நான் கொண்டு வந்து தர்றேன்... பதிலுக்கு என் ராஜாத்தி நீ, ரோஜாப்பூ மாதிரி குழந்தை பெத்துக் கொடு போதும்...!"

'அத்தே...!' - மானசீகமாய் உள்ளுக்குள் அலறி உறைந்தாள் யமுனா.

(தொடரும்)

மையைச் சொல்லிப் பார்க்கலாமா...?'

'வேண்டாம்... இது பேரலல் லைன் டெலிபோன். எந்த அறையிலிருந்தாவது யாராவது கேட்டு விட்டால்.... வேற வினை 'ய வேண்டாம்...!'

"என்ன செய்யலாம்...?" நெற்றியின் இரண்டு பக்கமும் 'விண் விண்' என்று துடிக்கும் தலைவலியோடு யோசித்துக் கொண்டிருக்கும்போதே அறைக்குள் அகில் நுழைந்தான். கையில் க்ரே நிற ப்ரீப்கேஸ்.

"யமுனா...! நான் ஆபீஸுக்குக் கிளம்பறேன். இன்னிக்கு லீவு போடலாம்னு நினைச்சு ஜி.எம்.க்கு ஃபோன் போட்டேன். அவர் 'நீ காலையிலே வந்தேயாகணும்... மத்தியானம் வேணும்னா லீவு போட்டுக்க'ன்னு சொல்லிட்டார். நான் மத்தியானம் ஒரு மணிக்கெல்லாம் வந்துடுவேன்."

யமுனா சிரமப் புன்னகையோடு எழுந்து உட்கார்ந்தாள். கணவனின் கையைப் பற்றினாள்.

"போய்ட்டு வாங்க. இதுக்கெல்லாம் லீவு போட வேண்டியது இல்லை."

"இது எப்பேர்ப்பட்ட ப்ரமோஷன்... கொண்டாட வேண்டாமா...?"

யமுனாவின் தோள்களைப் பற்றிக் கொண்டு அவளுடைய முன் நெற்றியோடு தன் நெற்றியை மெல்ல இடித்தான்.

"அய்யோ... வலிக்குது..."

"ஸாரி...! சரி... கோவிந்தசாமி என்ன

# KALKI SHOPPING PAGE

## ''என்னோட விருச்சிக ராசிக்கு நல்ல



## நடக்கணுங்க நடக்கும்!



**மேஷம் :** உங்க மதிப்பு, செல்வாக்கு, அந்தஸ்து மூணும் 'ஜிங்'னு ஏறப் போகுது. குடும்பத்தில் சுப காரியம், விருந்து, உபசாரம், விருந்தாளி வருகைன்னு வீடு இரண்டுபடப் போகுது. அதுக்கு ஏத்த மாதிரி வரவேண்டிய பணமெல்லாம் வந்து சேர்ந்திடும். வி.ஐ.பி.ங்களோட தொடர்பால் அனுகூலம் ஏற்படலாம். நல்ல தகவல் வரும். உடம்பு எந்தப் பிரச்னையும் பண்ணாது. பெரியவங்க சொல்லை மதிச்சு நடந்துக்கங்க, அதுதான் நல்லது.



**ரிஷபம் :** உங்க மனசுல உற்சாகமும் மகிழ்ச்சியும் பீறிடப்போகுது. உங்க கவர்ச்சி அதிகரிச்சு பசையுள்ளவர்கள் உங்களோடு தொடர்பு ஏற்படுத்திக்க முன் வருவாங்க. அந்தத் தொடர்பு உங்களுக்கு நிறைய நன்மையை ஏற்படுத்தப்போகுது. துணிமணி, நகை நட்டுன்னு ஏதாவது வாங்குவீங்க. எதிரிகள் எல்லாம் 'ஜுட்' தான். புது ஆளுங்கிட்டே பழகும்போது மட்டும் ஜாக்கிரதையாக இருங்க, ஏதாவது தொந்தரவு ஏற்படுவதற்கு சான்ஸ் இருக்கு. வெளிநாட்டுத் தொடர்பால் நன்மை ஏற்படப் போகுதுன்னு எதிர்பார்க்காதீங்க. தேவையில்லாத அலைச்சலையும் மன சஞ்சலத்தையும் தவிர்க்க முடியாது.



**மிதுனம் :** நீங்க போட்ட திட்டங்கள் 'வர்க்-அவுட்' ஆகுற நேரம் வந்தாச்சு. எதிர்ப்புகளை எல்லாம் சமாளிக்கிற சக்தி திடீரென்று உண்டாகிவிடும். மனசுல தைரியமும் தன்னம்பிக்கையும் அதிகமாகும். குடும்பத்தில் சுபகாரியங்களுக்குச் செலவு செய்ய வேண்டி வரும். அனாவசியமான செலவுகளும் கூடவே ஏற்படும். சிக்கனமா இருந்துடுங்க. நேரான பாதையில் மனசைச் செலுத்துங்க. முன்பின் தெரியாதவங்ககிட்டே வாயே திறக்காதீங்க. வெளிப்படையாகப் பழகுவதை தற்சமயத்துக்குக் குறைச்சுக்குங்க.



**கடகம் :** வாரம் முழுக்க உற்சாகமாக இருக்கப் போறீங்க. தொட்டதெல்லாம் பொன்னானால், வேறு எப்படி இருக்க முடியும்? நல்ல நேரத்தைப் பயன்படுத்திக்கிறது உங்க கையில் தான் இருக்கு. இன்ன விதத்திலன்னு இல்லை, பல விதத்தில் வருமானம் பெருகும். குடும்பத்தில் ஒரு சுபகாரியம் நிச்சயம் உண்டு. அது திருமணமாக இருக்கலாம், மகப்பேறாக இருக்கலாம். எதிரிகள் எல்லாம் 'கப்சுப்'னு அடங்கிப் போயிடுவாங்க. சின்னச் சின்ன பிரச்னை ஏற்படக்கூடும், ஆனா கடவுள் அனுக்கிரஹத்தால் ஜோரா சமாளிச்சுடுவீங்க.



**சிம்மம் :** உங்க திறமையும் புத்திசாலித்தனமும் பளிச்சிடப்போகுது. உங்க பேச்சே 'ஸ்வீட்'டா இருக்கும். மத்த இனக்காரர்களோட சகவாசம் நன்மை ஏற்படுத்தப்போகுது. அவங்க வெளிநாட்டைச் சேர்ந்தவங்களாகக்கூட இருக்கலாம். சுப காரியங்களுக்காகச் செலவழிக்க வேண்டி வரும். ஆனால் மற்றபடி பணப் போக்குவரத்தில் எந்தக் குறைச்சலும் இருக்காது. மனசில் மட்டும் குழப்பம் இருந்துக்கிட்டே இருக்கும். எச்சரிக்கையா நடந்துக்குங்க. நிதானமும் விவேகமும் முக்கியம்.



**கன்னி :** உங்களுடைய திறமை, ஆற்றல் எல்லாம் வெளியே வரப் போகுதுங்க. வாழ்க்கையில் முன்னேற்றம் ஏற்படுவதை நீங்களே உணருவீங்க. நீங்க வேலை இல்லாதவரா? - மூணு எண்ணுவதற்குள்ளே வேலை கிடைச்சுடும். உத்தியோகஸ்தரா? - முக்கியமான பதவிகளும் பொறுப்புகளும் வந்துக்கிட்டே இருக்கு. எதிரிகளை எல்லாம் ஒரு வழி பண்ணி வெற்றி அடைஞ்சிடுவீங்க! அதே மாதிரி குடும்பத்தில் திருமணம், குழந்தை பாக்கியம்





எல்லாம் கூட வருவதற்கு சிறந்த நேரமுங்க. ஆனால், எதையும் சிந்தித்து பக்குவமாய் முடிவெடுங்க.



**துலாம் :** பிரச்னைகள் நிறைய ஏற்படப்போகுது. ஆனாலும் சமாளிச்சுடுவீங்க. தெய்வ பலத்தால் மனசில் தெளிவு பிறக்கும். பேச்சில் மட்டும் பதற்றம் இல்லாமல் பார்த்துக்குங்க. முடிஞ்ச வரைக்கும் கடுமையைக் குறைச்சு இனிமையைக் கூட்டுங்க. கணவன்-மனைவி உறவு ஒரு நாளைப் போல இன்னொரு நாள் இருக்காது. எந்தக் காரியத்தையும் எடுத்தோம், முடிச்சோம்னு செய்ய முடியாது. குறுக்கீடுகள் வந்துக்கிட்டே இருக்கும். உடம்பைப் பத்திரமாகப் பார்த்துக்குங்க.



**விருச்சிகம் :** உங்க மதிப்பு, கௌரவம், அந்தஸ்து, புகழ் எல்லாமே திருப்தியா மனசுக்கு நிறைவா இருக்கும். ஸ்நேகிதருங்க, சொந்தக்காரங்க எல்லாரும் வலது கையாக இருந்து ஒத்தாசை செய்வாங்க. வீடு, நிலம் சம்பந்தப்பட்ட காரியங்கள் நடந்திடும். வாங்கணும்னு நினைச்ச வீட்டுக்குத் தேவையான பொருள்களை எல்லாம் வாங்கிடுவீங்க. நகை வாங்கக்கூட சான்ஸ் இருக்கு. ஆன்மிக காரியங்களில் பங்கேத்துக்குவீங்க. பண நிலவரம் திருப்தியாவே இருந்து வரும். உத்தியோகஸ்தர்கள் பதவி உயர்வு, சம்பள உயர்வுன்னு தடபுடலா எதிர்பார்க்கலாம்.



**தனுசு :** உங்க திறமைக்கும் உழைப்புக்கும் பலன் கிடைக்கப்போகுது. முக வசீகரம்கூடி, புத்திசாலித்தனமும் பளிச்சிடப்போகுது. அப்பா வழி சொத்துக்கள் வந்து சேரக்கூடிய வாய்ப்பு இருக்கு. உடன்பிறந்தவங்களால் அனுகூலம் ஏற்படும். கணவன் - மனைவி உறவு தெளிந்த ஓடையா இருக்கும். பெண்கள் நினைச்ச காரியம் நடந்திடும். உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்குங்க, பயணங்களை முடிஞ்சவரை தவிர்த்திடுங்க. புது முயற்சி எல்லாம் இப்ப வேண்டாமே! கொடுக்கல் வாங்கல் விஷயத்தில் உஷாரா இருங்க. வாக்குவாதம், சண்டை சச்சரவுகளுக்கெல்லாம் 'நோ' சொல்லிடுங்க.



**மகரம் :** உங்க புத்திசாலித்தனம், நிர்வாகத்திறமை, துணிவு எல்லாம் வெளியில் தெரிகிற நேரம் வந்தாச்சு. மற்றவர்களைக் கவர்ந்து உங்க திட்டங்களை நிறைவேத்திக்குவீங்க. எதிரிகள் எல்லாம் ஒடி ஒளிஞ்சுக்குவாங்க. கோர்ட், வழக்கு விவகாரங்களில் எல்லாம் ஜெயம்தான் போங்க. விருந்து உபசாரமெல்லாம் உண்டு. பசங்களால் மகிழ்ச்சி உண்டாகும். பண நிலைமை அபிவிருத்தி ஆகும், அதிர்ஷ்ட வாய்ப்பு கூட அடிக்கலாம். கணவன் - மனைவி உறவு சீராக இருந்து வரும். மொத்தத்தில் உங்க சாமர்த்தியத்தாலும் துணிச்சலாலும் நிறைய சாதனை படைக்கப் போறீங்க!



**கும்பம் :** உங்க மனத்தில் துணிச்சலும் வேகமும் உண்டாகும். எடுத்த காரியங்களைத் தலைகீழே நின்றாவது முடிச்சிடுவீங்க. மனோபலம் கூடி நிறைய சாதனை பண்ணுவீங்க. பக்தி மார்க்கத்திலும் ஞான மார்க்கத்திலும் ஆர்வம் ஜாஸ்தி ஆயிடும். ஆனால் அலைச்சல் அதிகமாகப் போகுது. உடம்பைப் பத்திரமாகப் பார்த்துக்குங்க. பிள்ளைகளுக்காக செலவுகள் செய்ய வேண்டி வரும். அவங்களுக்கு நம்ம செலவழிக்காம யாரு செலவழிப்பாங்க? உங்களைப் பொறுத்தவரை, எதிலும் ஆசை வைக்காம நேரான பாதையில் போக முயற்சி பண்ணுங்க.



**மீனம் :** உங்க உழைப்பும் திறமையும் வீண் போகாதபடி அதன் பலனை அனுபவிச்சிடுவீங்க. குறிப்பா, பெண்கள் ஏக உற்சாகமாக இருப்பாங்க. பக்தி, ஆன்மிக சமாசாரங்களில் நாட்டம் ஜாஸ்தி ஆயிடும். கோவில், குளம்னு யாத்திரைகள் போறதுக்கு நிறைய சான்ஸ் இருக்கு. அப்படிப் போகும்பொழுது கைக்குமேல் பலன் கிடைச்சு மனசு தெளிவாயிடும். ஆனால், பயணங்களில் சின்ன சங்கடங்கள் ஏற்பட வாய்ப்பிருக்கு, உஷார்.



**சௌம்யா:**

இந்த டி.வி., மாடலிங் எல்லாம் சும்மா ஜாலிக்குதான். நான் சீரியஸா ஏதாவது செஞ்சா, அது கம்ப்யூட்டர் துறையில தான். அதான், சாஃப்ட்வேர் படிச்சிட்டிருக்கேன். அது 'கிளிக்' ஆகலைன்னா,

• த்ரிஷா

# சின்னத்திரையிலும், மாடலிங்கிலும் வண்ணக் கோலங்கள் படைத்துக் கொண்டிருக்கும் சில நட்சத்திர மின்மினிகளிடம் "சட்னு சொல்லுங்க... அடுத்து என்ன? நடிப்பா, படிப்பா?" என்று கேட்டபோது...

• பர்த்தா

• புவனேஸ்வரி

இன்னொரு லைஃப் லைன் வெச்சிருக்கேன். ஹோட்டல் பிசினஸ்... ஒண்ணு மூளைக்கு உணவு... இன்னொண்ணு வயிற்றுக்கு உணவு!

**டாக்டர் சார்மிளா:**
என்னைப் பார்த்து இப்படியொரு கேள்வி கேட்டிருக்கவே கூடாது! எம்.பி.பி.எஸ் படிச்சுட்டு அதை வீணாக்குவேனா? பி.எச்.டி பண்ணப் போறேன். மருத்துவ சேவைதான் என்னோட ஒரே லட்சியம். ஏதோ பார்க்க லட்சணமா இருக்கேன், சுமாரா நடிக்கவும் வருதுன்னு நடிக்க கூப்பிடறாங்க. அதை பயன்படுத்திக்கிறதுதானே புத்திசாலித்தனம்?

**உஷா:**
விஜய் டி.வியில் 'ஐ லவ்

# படிப்பா? நடிப்பா?

யூ வி.ஐ.பி' நிகழ்ச்சி செஞ்சுக்கிட்டிருக்கேன். மிச்ச நேரமெல்லாம், பாடப் புத்தகத்துக்குள்ளேயே கிடப்பேன். அழகான புத்தகப் புழு நான்! ஏன்னா, நல்லா படிச்சு, டாக்டராகணுங்கிறதுதான் ஒரே கனவு. எங்க குடும்பத்துல, தாய்மாமன்க எல்லாரும்

• நீனு



• ஸ்ரீ ரஞ்சனி

டாக்டருங்கதான். மைன்டை ரிலாக்ஸ்டா வைச்சுக்கறதுக்கு தான் இந்த டீ.வி. நிகழ்ச்சியெல்லாம் பண்றேன்.



* சிவரஞ்சனி



* மேதா

**புவனேஸ்வரி:**

என்னோட உயிர் மூச்சே நடிப்புதாங்க. ஐ.ஏ.எஸ். படிச்சு, உயர் அதிகாரியா இருப்பாங்க. ஆனா அவங்களை அடுத்த வீட்டுக்காரங்களுக்குக் கூட தெரிஞ்சிருக்காது. அதுவே, டீ.வியில, சின்ன ரோல்ல, தலையைக் காட்டினா கூட, உடனே நட்சத்திர அந்தஸ்து கிடைச்சிடுது. படிக்கறது எதுக்கு? நல்லா சம்பாதிக்க தானே? பணம்+புகழ்+கலை திருப்தியும் தர்றதனால, நடிப்புக்கு தாங்க என்னோட வோட்டு!

**சிவரஞ்சனி:**

இளமையும் அழகும் இருக்கறதனால, இப்ப நிறைய டீ.வி. வாய்ப்பு கிடைக்குது. அதை நிரந்தரம்னு நம்பி, படிப்பைப் பாதியிலே விட்டுட முடியுமா? பி.ஏ. கார்ப்பரேட் பண்றேன். மேலே படிக்கப் போறேன். 'மேலே'ன்னா மொட்டை மாடி இல்லீங்க. உயர் படிப்பு. ஓ.கே?



* சௌம்யா

**நீனு:**

டீவிலே நிகழ்ச்சி தொகுத்து தர்றதனால, ஒளி வட்டம் வந்துடுது. புது இமேஜ் கூடிடுது. எங்க போனாலும் அடையாளம் தெரிஞ்சுக்கறாங்க. கிடைக்கிற காசு பாக்கெட் மணிக்கு தேறுது. ஆனா என்னோட இன்ட்ரஸ்ட் படிப்புலதாங்க. பி.ஏ. படிச்சுட்டிருக்கேன். எம்.ஏ. கிரிமினாலஜி முடிச்சுட்டு, ஐ.பி.எஸ். படிக்கப் போறேன்.. 'நீனு ஐ.பி. எஸ்...' கேட்கவே ஜாலியா இருக்குல்ல?

**மேதா:**

பிஃப்டி, பிஃப்டி! நடிப்பு, படிப்பு இரண்டுலேயும் காலை வெச்சுக்கிட்டு, சரியா பாலன்ஸ் பண்ணிக்கிட்டிருக்கேன். அம்மா என்னோடவே இருக்கறதனால சுலபமா சமாளிச்சுட்டிருக்கேன். தாங்க்யூ அம்மா!

**த்ரிஷா:**

நான் ரொம்பவே பிரைட்



* உஷா

ஸ்டூடண்ட். நிறைய படிப்பேன்னு தான் நினைச்சுட்டிருந்தேன். 'மிஸ் சென்னை'னு கிரீடம் கிடைச்ச வேளை. டி.வி., மாடலிங்னு வாய்ப்புகள் வரவே, சரி 'டைம்' இருந்தா பண்ணலாம்னு ஆரம்பிச்சேன். இப்ப அதுவே தொழிலா மாறிடுச்சு. பி.பி.ஏ. பண்றேன். ஈவ்னிங் காலேஜ் என்பதாலே, நிறைய நேரம் கிடைக்குது. 'மின் பிம்பங் கள்'ல இருந்து கூட நடிக்க வாய்ப்பு வந்தது. ஆனா, எனக்கு சீரியல்ல நடிக்க அவ்வளவா இஷ்ட மில்லை. மாடலிங், ஸ்டேஜ் ஷோ, இதுல தான் த்ரிஷாக்கு த்ரில்!



* சார்மிளா

**ப்ரீத்தா:**

அடக்கத்தோடயே சொல்லிக்கறேன். நான் நல்லா பாடு வேன். ரொம்ப நல்லா பாடு வேன். 'ஆஷா போன்ஸ்லே போல பாடறியே'னு சொல்லி சொல்லியே என்னை மேடைமேலே ஏற்றிவிட்டுட் டாங்க... அவங்களுக்கு என்னோட நன்றி... தன்யவாத், தாங்க்ஸ்...

* ஸ்ரீதேவி

எனக்குப் படிக்கதான் ஆசை! ஆனால் புத்தகப்படிப்பு அல்ல! கர்நாடக இசைப் படிப்பு. இப்ப ரொம்ப சீரியஸா மியூசிக் கத்துக்கிட்டிருக்கேன். இசைக் குயிலின் இனிய கீதம் விரைவில்...

**ஸ்ரீரஞ்சனி:**

படிப்பெல்லாம் முடிச்சாச்சு. 'ஸ்டேஜ் ஷோ', 'டி.வி. நிகழ்ச்சிகள்'னு தான் மூனைப்பா இருக்கேன். நான் நல்லா பாடுவேன். பம்பரம் சுத்தி விட்டது போல ஆடுவேன். எங்க தாத்தா கலைமாமணி கடலூர் சுப்ர மணியம் பிரபல கர்நாடக இசைப்பாடகர். அந்த 'ஜீன்ஸ்' சமாசாரம் எங்கிட்டயும் இருக் கணுமே! அதனால கலைத் திறமை தானாவே பொங்குது. ஜெயா டி.வியில் என்னோட பெயர் என்ன தெரியுமா? 'டேக் ஒன் ஆர்டிஸ்ட்'. சினிமாவுல டான்ஸ் கொரியோகிராஃப் பண்ணனுங் கிறதுதான் என்னோட விருப்பம். இப்ப சொல்லுங்க, நான் எதைத் தேர்ந்தெடுத்தா நல்லது?

**ஸ்ரீதேவி:**

'கோலிவுட்' நிகழ்ச்சிதான் என்னைப் பாப்புலர் ஆக்கியது. 'சினிமசாலா', 'கவுன்ட் டவுன்', இனிய இல்லம்'னு நிறைய நிகழ்ச்சிகள் பண்ணிக்கிட்டிருந் தாலும், என்னோட தேர்வு படிப்புதாங்க. எம்.எஸ்.ஸி படிச்சிருக்கேன். பயோ கெமிஸ்ட்ரியிலே செல்லுலார் லெவல்ல ஆராய்ச்சி பண்ணிக்கிட்டிருக்கேன். அதுக்கு நிறைய புத்தகங்கள், சி.டி. ஆராய்ச்சி உபகரணங்கள் தேவைப்படுது. காம்பேரிங் பண்ணி வர்ற காசெல்லாம் ஆராய்ச்சிக்குப் பயன்படுத்தறேன். அது இல்லைன்னா, இது இல்லை! சரியா?

- இளமதி/அனு

# அழைக்கிறது அமெரிக்கா!

## கல்கி - டயானா வொர்ல்ட் டிராவல் இணைந்து வழங்கும்

### குவிஸ் கூப்பன் — 19

1) வால்மீகி, காளிதாசர் ஆகியோர் எந்த மொழியில் எழுதிப் புகழ் பெற்றனர்?

2) கமலா தாஸ், குஷ்வந்த் சிங் ஆகியோர் எந்த மொழியில் எழுதிப் பிரபலமடைந்தனர்.?

3) எந்த மொழி இலக்கியத்தில் கபீர், முன்ஷி பிரேம் சந்த் ஆகியோர் வெகு பிரபலம்?

4) புட்டப்பா, கரந்த் ஆகியோர் எந்த மொழியில் தங்களது படைப்புக்களை வெளியிட்டார்கள்?

5) சங்கரன் குருப், தகழி ஆகியோர் எந்த மொழியில் எழுதி இலக்கிய அங்கீகாரம் பெற்றனர்?

6) காண்டேகர், ஹரிநாராயண ஆப்தே போன்றவர்கள் தங்கள் படைப்புகளை எழுதியது எந்த மொழியில்?

### விடைகள்:

1) ....................................................................

2) ....................................................................

3) ....................................................................

4) ....................................................................

5) ....................................................................

6) ....................................................................

### குவிஸ் போட்டி — 19

இந்த வாரம் ரொம்ப சுலபமான கேள்விகள். பேனா மொழி எது என்று சரியாக யோசித்து கூப்பனில் பூர்த்தி செய்து, முந்தைய வாரங்களில் செய்ததைப் போலவே மற்ற கூப்பன்களோடு பூட்டி வையுங்கள். இருபத்திஆறு வார இறுதியில் எல்லா கூப்பன்களையும் எங்களுக்கு அனுப்புங்கள். இதில் மிக அதிகமான கேள்விகளுக்குச் சரியான பதில் எழுதும் ஒரு நடருக்கு

**அமெரிக்கப் பயணம் பரிசு!**

**ஐரோப்பா பயணம் இரண்டாவது பரிசு!**

**மலேஷியா—சிங்கப்பூர் பயணம் மூன்றாவது பரிசு!**

இந்த மூன்று நிலைகளிலும் ஒருவருக்கு மேல் சரியான பதிலை எழுதியிருந்தால் இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை! பயணப் பரிசு பெறாதவர்களுக்கு அமரர் கல்கியின் நூல்கள் உண்டு.

ஆசிரியர் தீர்ப்புதான் இறுதி!




Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

